# مقرر الدورة

# 1

# பாடப் புத்தகம்


தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)

மீள்பரிசீலனை : எம். அஹ்மத் (அப்பாஸி)

ترجمة: محمد عمران بن جمال الدين

مراجعة : أحمد بن محمد



المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة

ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH

P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065

FAX 4970126 - E-Mail:rabwah@www.com

بسم الله الرحمن الرحيم

# அகீதா

# 1

தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)
மீள்பரிசீலனை : எம். அஹ்மத் (அப்பாஸி)

# توحيد

(باللغة التاملية)

ترجمة: محمد عمران بن جمال الدين
مراجعة : أحمد بن محمد

المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة
ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH
P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065
FAX 4970126 - E-Mail:rabwah@www.com

بسم الله الرحمن الرحيم

# வாரங்கள் அடிப்படையில் பாட அட்டவணை

| வாரம் | விடயம் | நேர அளவு |
|---|---|---|
| 1 | இஸ்லாமியக் கொள்கையின் (அகீதாவின்) அடிப்படை அம்சங்கள் | 45 நிமிடங்கள் |
| 2 | அல்லாஹ்வை நம்புதல் (1) | 45 நிமிடங்கள் |
| 3 | அல்லாஹ்வை நம்புதல் (2) | 45 நிமிடங்கள் |
| 4 | வானவர்களை நம்புதல் (1) | 45 நிமிடங்கள் |
| 5 | வானவர்களை நம்புதல் (2) | 45 நிமிடங்கள் |
| 6 | ஜின்கள் | 45 நிமிடங்கள் |
| 7 | வேதங்களை நம்புதல் | 45 நிமிடங்கள் |
| 8 | மாதாந்தப் பரீட்சை | 45 நிமிடங்கள் |
| 9 | ரஸூல்மார்களை நம்புதல் (1) | 45 நிமிடங்கள் |
| 10 | ரஸூல்மார்களை நம்புதல் (2) | 45 நிமிடங்கள் |
| 11 | இறுதி நாளை நம்புதல் | 45 நிமிடங்கள் |
| 12 | மீளெழுப்பப்படுவதை மறுப்போருக்கான பதில் | 45 நிமிடங்கள் |
| 13 | மண்ணறையின் இன்ப, துன்பங்களும், அதனை மறுப்போருக்கான பதிலும் | 45 நிமிடங்கள் |
| 14 | விதியை நம்புதல் (1) | 45 நிமிடங்கள் |
| 15 | விதியை நம்புதல் (2) | 45 நிமிடங்கள் |

# இஸ்லாமியக் கொள்கையின் (அகீதாவின்) அடிப்படை அம்சங்கள்

இஸ்லாம், கொள்கையையும் கோட்பாட்டையும் உள்ளடக்கிய ஒரு மார்க்கமாகும். அதன் கோட்பாடுகள் சிலவற்றையும் அது உள்ளடக்குபவற்றையும் நாம் அடுத்த தரத்தில் சுட்டிக்காட்டுவோம்.
இஸ்லாமிய அகீதா ஆறு அடிப்படை அம்சங்களை உள்ளடக்கியுள்ளன. இதனை ஈமானின் கூறுகள் என்றழைக்கிறோம்.

1-அல்லாஹ்வை விசுவாசங் கொள்ளல்.
2-அவனது வானவர்களை விசுவாசங் கொள்ளல்.
3-அவன் அருளிய வேதங்களை நம்புதல்.
4-இறைத் தூதர்களை விசுவாசங் கொள்ளல்.
5-மறுமை நாளை நம்புதல்.
6-நன்மை தீமை அனைத்தும் அவனது நாட்டத்தின் விளைவே என விசுவாசங் கொள்ளல்.

இவற்றிற்கு அல்குர்ஆனிலும் சுன்னாவிலும் ஏராளமான ஆதாரங்கள் இருக்கின்றன. அல்லாஹ் கூறுகிறான்:-

﴿ لَّيْسَ ٱلْبِرَّ أَن تُوَلُّوا۟ وُجُوهَكُمْ قِبَلَ ٱلْمَشْرِقِ وَٱلْمَغْرِبِ وَلَٰكِنَّ ٱلْبِرَّ مَنْ ءَامَنَ بِٱللَّهِ وَٱلْيَوْمِ ٱلْءَاخِرِ وَٱلْمَلَٰٓئِكَةِ وَٱلْكِتَٰبِ وَٱلنَّبِيِّـۧنَ ﴾ البقرة: ١٧٧

கிழக்கு, மேற்கு ஆகியவற்றின் பக்கமாக உங்கள் முகங்களை நீங்கள் திருப்புவது (மட்டும்) நன்மை (செய்தததாக ஆகிவிடுவது) இல்லை, எனினும் நன்மையுடையவர், (எவரெனில் உங்களில்) எவர் அல்லாஹ்வையும, இறுதி நாளையும் மலக்குகளையும், வேதத்தையும், நபிமார்களையும் விசுவாசம் கொள்கிரார்களோ அவர்களேயாவர். (பகறா : 177)
மேலும் கூறுகிறான்:-

﴿ إِنَّا كُلَّ شَىْءٍ خَلَقْنَٰهُ بِقَدَرٍ ۝٤٩ وَمَآ أَمْرُنَآ إِلَّا وَٰحِدَةٌ كَلَمْحٍۭ بِٱلْبَصَرِ ﴾ القمر: ٤٩ - ٥٠

நிச்சயமாக நாம் ஒவ்வொரு பொருளையும் (நிர்ணயிக்கப்பட்ட) அளவின் படியே படைத்திருக்கின்றோம். நம் கட்டளை (நிறைவேறுவது) கண்சிமிட்டுவது போன்ற ஒரு கணமே தவிர இல்லை. (கமர் : 49,50)

உமர் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள், ஒரு நாள் நாங்கள் ரஸுல் (ஸல்) அவர்களுடன் அமர்ந்து கொண்டிருக்கும் போது கடும் வெண்ணிற ஆடையணிந்து, கடும் கருநிற தலை மயிர்களைக் கொண்ட ஒருவர் எங்களிடம் வந்தார். எங்களில் ஒருவரும் அவரை அறிந்ததில்லை. அவரிடம் பிரயாணியிடம் காணப்படும் அடையாளங்களும் காணப்படவில்லை. அம்மனிதர் ரஸுல் (ஸல்) அவர்களுக்கு மிக சமீபமாகவே அமர்ந்து கொண்டார். அவரது இரு முட்டங்கால்களையும் ரஸுல் (ஸல்) அவர்களது முட்டங்கால்களுடன் சேர்த்து வைத்துக்கொண்டார். மேலும் அவரது இரு கைகளையும் ரஸுல் (ஸல்) அவர்களது தொடைகள் மீது வைத்தார். முஹம்மதே! எனக்கு இஸ்லாத்தைப் பற்றி கூறுவீராக என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், இஸ்லாம் என்றால் அல்லாஹ்வைத் தவிர வணங்கப்படுவதற்கு வேறொருவன் இல்லை என்றும் முஹம்மத் (ஸல்) அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி கூறுவதும், அத்துடன் தொழுகையை நிலை நாட்டுவதும், ஜகாத்தை கொடுத்து வருவதும், ரமழான் காலங்களில் நோன்பு நோற்பதும், சக்தி பெற்றிருப்பின் ஹஜ் கடமையை நிறைவேற்றுவதுமாகும் என்றார்.

அதற்கு அம்மனிதர் நீர் உண்மையைக் கூறிவிட்டீர் என்றார். கேள்வி கேட்டு கூறப்பட்ட பதிலை உண்மைப்படுத்திய விடயம் எங்களுக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

பின்னர் ஈமான் பற்றி கூறுவீராக? என்றார். அதற்கு, அல்லாஹ்வைக் கொண்டும், அவனது மலாயிகாமார்களைக் கொண்டும், அவனது வேதங்களைக் கொண்டும், அவனது தூதர்களைக் கொண்டும், மறுமை நாளைக் கொண்டும், நன்மை தீமை அனைத்தும் அவனது நாட்டத்தின்படியே நிகழ்கின்றன என்றும் ஈமான் கொள்ளலாகும் என்றார். அதற்கு அம் மனிதர் நீர் உண்மையைக் கூறிவிட்டீர் என்றார்.

பின்னர் இஹ்ஸான் என்பது பற்றி கூறுவீராக? என்றார். அதற்கு, இஹ்ஸான் என்பது நீர் அல்லாஹ்வைப் பார்ப்பது போன்ற உணர்வுடன் வழிப்பட வேண்டும். நீர் அவனைப் பார்க்காவிடினும் அவன் உம்மை பார்த்துக்கொண்டிருக்கிறான் என்றார் நபியவர்கள்.

மேலும் இறுதி நாள் பற்றி கூறுவீராக? என்றார். அதற்கு, இக்கேள்வியைக் கேட்பவர், கேட்கப்படுபவரை விட அதனை நன்கறிவார் என்றார் நபிகளார். அப்படியாயின் அதன் அடையாளங்கள் பற்றி கூறுவீராக? என்றார் அம்மனிதர். அதற்கு நபிகளார், அப்போது ஓர் அடிமைப் பெண் தனது எஜமானனைப் பெற்றெடுப்பாள், மேலும் பாதணியற்றவர்களும், ஆடையற்றவர்களும், ஏழைகளும், இடையர்களும், அடுக்கு மாடிகளைக் கட்டுவதில் போட்டி போட்டுக்கொண்டிருப்பர்.

(குறிப்பு : அன்று அறபிகள் இருந்த நிலமையையே ரஸூல் (ஸல்) அவர்கள் இவ்வாறு சுட்டிக்காட்டியுள்ளார்கள்)

பின்னர் அம்மனிதர் எழுந்து சென்றதும் ரஸூல் (ஸல்) அவர்கள் என்னிடம், உமரே! இக்கேள்விகளைக் கேட்டவர் யார் என்பதை நீர் அறிவீரா? என்றார். அல்லாஹ்வும் அவனது ரஸூலுமே அறிவர் என்றேன். அதற்கு, அவர் ஜிப்ரீல் (அலை) ஆவார். உங்களுக்கு உங்களது மார்க்கத்தை கற்பிப்பதற்காகவே வந்தார் என்றார் நபிகளார். (ஆதாரம் : முஸ்லிம் :8)

இந்த ஆறு அடிப்படை அம்சங்களையுமே அனைத்து நபிமார்களும் ஒருமித்து ஏற்றுள்ளனர். இதனடிப்படையிலே வேதங்களும் இறங்கியுள்ளன. இவற்றை பூரணமாக ஏற்றுக்கொள்ளாதவரை ஒருவரது ஈமான் பூர்த்தியாகாது. இவற்றில் ஒன்றையாவது ஒருவர் நிராகரித்தால் அவர் இஸ்லாத்தை விட்டு நீங்கியவராக கருதப்படுவார்.

# அல்லாஹ்வைக் கொண்டு ஈமான் கொள்ளல்

அல்லாஹ் தான் இப்பிரபஞ்சம் அனைத்தையும் படைத்தவன், அவனே இதற்கு அதிபதி என ஈமான் கொள்ளலாகும். மேலும் அவனே வழிப்படுவதற்கும், வணங்கப்படுவதற்கும் அருகதையுடையவன் என்றும், அனைத்து பண்புகளும் நிரம்பப் பெற்றவன் எனவும், குறைகளை விட்டும் தூய்மையானவன் எனவும் ஈமான் கொள்வதோடு அதனடிப்படையிலே செயற்படவும் வேண்டும்.

அல்லாஹ்வை ஈமான் கொள்ளல் நான்கு விடயங்களை உள்ளடக்கியுள்ளன.

**முதலாவது:** அல்லாஹ் இருக்கிறான் என்பதை ஈமான் கொள்ளல். பின்வருவன இவற்றிற்கு ஆதாரமாக அமைந்துள்ளன:

1.சுபாவம் : ஒவ்வொரு படைப்பும் சிந்திக்காமல், கற்றுக்கொல்லாமல் அவற்றை படைத்த ஒருவன் இருக்கிறான் என்று நம்பிக்கை கொள்ளும் சுபாவத்திலேயே படைக்கப்பட்டுள்ளன. அவற்றின் உள்ளங்களில் வேறுவிதமான கொள்கைகள் போடப்படாதவரை அவை அந்த நம்பிக்கையிலே வளர்கின்றன.
ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள், ஒவ்வொரு பிறப்பும் (படைத்தவன் அல்லாஹ்வை ஏற்றுக்கொள்ளும்) சுபாவத்திலேயே பிறக்கின்றன. எனினும் அவர்களது பெற்றோர்கள் தாம் அவர்களை யூதர்களாகவும், நஸாராக்களாகவும், நெருப்பு வணங்கிகளாகவும் மாற்றுகின்றனர். (ஆதாரம்: புஹாரி 1359)

2.அறிவு: (தற்போதுள்ள)இந்தப் படைப்புகள், முன் உண்டான படைப்புகள், இதற்கு பின்னர் படைக்கப்பட இருப்பவைகள் அனைத்திற்கும் படைத்தவன் ஒருவன் இருப்பது அவசியமே. ஏனெனில் எந்த ஒரு பொருளும் தன்னைத் தானே படைத்துக் கொண்டது என்றோ அல்லது இயற்கையாகவே உண்டானது என்றோ கூற முடியாது. பகுத்தறிவுக்குரிய இந்த அத்தாட்சியை அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது :

﴿أَمۡ خُلِقُواْ مِنۡ غَيۡرِ شَيۡءٍ أَمۡ هُمُ ٱلۡخَٰلِقُونَ﴾ ال طور: ٣٥

அவர்கள் அடிப்படையின்றி படைக்கப்பட்டார்களா? அல்லது அவர்களை (அல்லாஹ் தான்) படைத்தானா? (ஸூரதுத் தூர் 35)

3.இறைவேதங்கள்:- இறைவனால் அருளப்பட்ட வேதங்கள் அவனது படைப்புகளுக்கு தேவையான, நீதியான சட்டங்களையே வழங்கிக் கொண்டிருக்கின்றன. இது படைப்பிற்கு என்ன தேவைகள் இருக்கின்றன என்ற தெளிவான அறிவை படைத்தவன் பெற்றிருக்கிறான் என்பதை உணர்த்துகிறது.
மேலும் பூமியின் பல புதிர்களை பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் கூறி இன்று வரை அது உண்மையான தகவல்கள் தாம் என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கின்றன. இவையும் அவ்வேதங்கள் ஆற்றல் மிக்க (அல்லாஹ்) ஒருவனால் அறிவிக்கப்பட்டவையே என்பதற்கு ஆதாரமாகவுள்ளன.

4.உணர்வுகள்: உணர்வுகளும் இறைவன் ஒருவன் உள்ளான் என்பதற்கு சான்றாக இரண்டு விதங்களில் அமைகின்றன :

**முதலாவது** : பிரார்த்திப்பவனின் பிரார்த்தனைகள் ஏற்றுக்கொள்ளப்படுவது, கஷ்டத்திற்குள்ளானவர்களுக்கு உதவியளிக்கப்படுவது போன்ற விடயங்களை நாம் பார்த்தும் கேட்டும் வருகின்றோம். இவையும் அல்லாஹ் இருக்கின்றான் என்பதை எமக்குணர்த்தவே செய்கின்றன.
இதற்கு அல்குர்ஆனிலும் சுன்னாவிலும் ஏராளமான ஆதாரங்கள் இருக்கின்றன. அல்லாஹ் கூறுகிறான்:

﴿وَنُوحًا إِذْ نَادَىٰ مِن قَبْلُ فَٱسْتَجَبْنَا لَهُۥ﴾ الأنبياء: ٧٦

நூஹையும் (நினைவு கூறுவீராக) முன்னர் அவர் (பிராத்தனை செய்து) அழைத்த போது, அவருக்கு (அவரது பிராத்தனையை ஏற்று) நாம் பதில் கூறினோம். (அல்அன்பியா 76)
ஒருமுறை ஒரு நாட்டுவாசி வெள்ளிக்கிழமை பள்ளியினுள் நுழைந்து ரஸூல் (ஸல்) அவர்களிடம் மழைவேண்டி பிரார்த்திக்குமாறு கூறினார்.
**இரண்டாவது** : நபிமார்களுக்கு கொடுக்கப்பட்ட மு.ஃஜிஸாத் எனும் அற்புதங்கள். இவற்றை அப்போதைய மக்கள் கண்டார்கள், கேள்விப்பட்டுமிருக்கிறார்கள். இது போன்ற தெளிவான அத்தாட்சிகள் அல்லாஹ் இருக்கிறான் என்பதை எமக்குணர்த்தவே செய்கின்றன. ஏனெனில் இவை மனித சக்திக்கு அப்பாற்பட்டவையாகவே இருக்கின்றன. இவற்றை அல்லாஹ் காண்பித்தது நபிமார்களுக்கு செய்த ஓர் உதவியாகவும், நபித்துவத்திற்கு ஓர் உதவியாகவுமேயாகும்.

அவற்றில் சில:
❖ மூஸா (அலை) அவர்களுக்கு கொடுக்கப்பட்ட தடியைக் கொண்டு கடலில் அடித்ததும் அது இரண்டாகப் பிளந்தது.
❖ மரணித்தவர்களை ஈஸா (அலை) அவர்கள் உயிர் பெறச் செய்தது.
❖ முஹம்மத் (ஸல்) அவர்கள் சந்திரனை இரண்டாகப் பிளக்கச் செய்தது.

**இரண்டாவது:** அல்லாஹ்வின் இறைமை பற்றி ஈமான் கொள்ளல்.
அதாவது அவன் ஒருவன்தான் (அண்டசராசரங்களிலுள்ள அனைத்தினதும்) ரப்பு (பரிபாலன்), அவனுக்கு இணை, துணை இல்லை என ஈமான் கொள்ளலாகும். (இதனை தௌஹீத் ருபூபிய்யா என்பர்). “ரப்பு” என்ற சொல் : படைத்தல், அரசாட்சி, அதிகாரம் ஆகிய அனைத்தையும் உள்ளடக்கும்.
இதனையே இறைவசனம் இவ்வாறு கூறுகிறது:

﴿أَلَا لَهُ ٱلْخَلْقُ وَٱلْأَمْرُ﴾ الأعراف: ٥٤

படைத்தலும், கட்டளைகளும் அவனுக்கே உரியதெனத் தெரிந்து கொள்ளுங்கள். (அல் அஃராப் 54)

**மூன்றாவது:** அவனே வணக்கத்திற்குரியவன் என ஈமான் கொள்ளல்.
அதாவது வணங்கப்படுவதற்கு அருகதையுடையவன் அல்லாஹ் தான் என ஈமான் கொள்ளலைக் குறிக்கும். வணக்கத்தில் அவனுக்கு நிகராக எதுவும் இல்லை என நம்புவதுமாகும். (இதனை தௌஹீத் உலூஹிய்யா என்பர்)“இலாஹ்” என்ற சொல் : கண்ணியத்துடனும் நேசத்துடனும் வணங்கப்படுபவனைக் குறிக்கின்றது.
இதனையே இறைவசனம் இவ்வாறு கூறுகிறது

﴿وَإِلَٰهُكُمْ إِلَٰهٌ وَٰحِدٌ لَّآ إِلَٰهَ إِلَّا هُوَ ٱلرَّحْمَٰنُ ٱلرَّحِيمُ﴾ البقرة: ١٦٣

(மனிதர்களே) மேலும், உங்கள் (வணக்கத்திற்குரிய) நாயன் ஒரே ஒரு (வணக்கத்திற்குரிய) நாயன்தான். அளவற்ற அருளும், நிகரற்ற அன்பும் உடைய அவனைத் தவிர (வணக்கத்திற்குரிய) நாயன் வேறு இல்லை. (அல் பகரா: 163)

**நான்காவது:** அவனுக்கே உரிய பண்புகள், பெயர்களைக் கொண்டு ஈமான் கொள்ளல்.

அதாவது அல்லாஹ் தனக்கு எந்த பண்புகளை தனது அல்குர்ஆனிலும், நபி (ஸல்) அவர்களின் பொன்மொழிகளிலும் இட்டுக்கொண்டுள்ளானோ அவற்றை அவ்வாறே ஈமான் கொள்ளலாகும். அவற்றை எவ்வித கருத்துமாற்றமோ, பாழாக்குதலோ செய்யாமலும், (அவற்றிற்கு) வடிவம் கொடுக்காமலும், உவமை காட்டாமலும் ஏற்றுக்கொள்வது கடமையாகும். (இதனை தௌஹீத் அஸ்மா வஸ்ஸிபாத் என்பர்) இதனையே இறைவசனம் இவ்வாறு கூறுகிறது:

﴿وَلِلَّهِ ٱلۡأَسۡمَآءُ ٱلۡحُسۡنَىٰ فَٱدۡعُوهُ بِهَا﴾ الأعراف: ١٨٠

இன்னும் அல்லாஹ்வுக்கு மிக்க அழகான பெயர்கள் இருக்கின்றன, ஆகவே அவற்றைக் கொண்டே நீங்கள் அவனை அழையுங்கள். (அல் அஃராப் 180)

மேலும் கூறுகிறது

﴿لَيۡسَ كَمِثۡلِهِۦ شَيۡءٞۖ وَهُوَ ٱلسَّمِيعُ ٱلۡبَصِيرُ﴾ ال شورى: ١١

அவனைப் போன்று எப்பொருளும் இல்லை, அவனே (யாவற்றையும்) செவியேற்கிறவன், பார்க்கிறவன். (அஷ் ஷூரா 11)

**அல்லாஹ்வை ஈமான் கொள்வதால் ஒரு முஃமினிடத்தில் ஏற்படும் மாற்றங்கள்:**

- அதை விடுத்து வேரொருவருக்கு சிரம்பணிந்திடவோ, பயந்து நடந்திடவோ, வேரொருவரில் ஆதரவு வைத்திடவோ அவனைத் தூண்டாது.
- அவனுக்கே உரிய பெயர்களையும், பண்புகளையும் கண்ணியப்படுத்துவதன் மூலம் அவனது பூரண அன்பை பெற்றிட முடிகிறது.
- அவன் ஏவியவற்றை எடுத்தும், தடுத்தவற்றை விலகியும் நடப்பதால் அவனுக்கு பூரணமாக அடிமைப்பட்டு நடக்க முடிகிறது.
- இம்மையிலும், மறுமையிலும் விமோட்சனம் கிடைக்கிறது.

# வானவர்களைக் கொண்டு ஈமான் கொள்ளல்

அல்லாஹ் தனக்காக வானவர்களை (மலக்குகளை) ஒளியினால் படைத்துள்ளான் என உறுதியாக நம்புவதாகும். அவர்களுக்கு சாட்டப்பட்ட வேலைகளை செய்து கொண்டிருப்பார்கள். மேலும் அவனது கட்டளைக்கு பூரணமாக வழிப்படுவதற்கான ஆற்றலையும் அதனை அமுல்படுத்துவதற்கான ஆற்றலையும் ஆளுமையையும் வழங்கியிருக்கிறான்.

அவர்கள் மறைவான ஒரு படைப்பாகும். அல்லாஹ்வை வணங்குவதற்காகவே அவர்கள் படைக்கப்பட்டுள்ளார்கள்.

அவர்களுக்கு ருபூபிய்யத், உலூஹிய்யத் சம்பந்தப்பட்ட எந்த சிறப்பம்சங்களும் இல்லை. இவர்களைப் பற்றி இறைவசனம் இவ்வாறு கூறுகிறது:

﴿وَلَهُۥ مَن فِي ٱلسَّمَٰوَٰتِ وَٱلۡأَرۡضِۚ وَمَنۡ عِندَهُۥ لَا يَسۡتَكۡبِرُونَ عَنۡ عِبَادَتِهِۦ وَلَا يَسۡتَحۡسِرُونَ ١٩ يُسَبِّحُونَ ٱلَّيۡلَ وَٱلنَّهَارَ لَا يَفۡتُرُونَ﴾ ع: ١٩ - ٢٠

வானங்களிலும், பூமியிலும் உள்ளோர் அவனுக்கே உரியவர்கள், மேலும் அவனிடம் இருப்பவர்கள் (ஆகிய மலக்குகள்) அவனை வணங்குவதை விட்டும் பெருமையடிக்க மாட்டார்கள். சோர்வடையவுமாட்டார்கள். அவர்கள் இரவிலும் பகலிலும் (அவனைத்) துதி செய்கின்றனர். (ஆனால் அதில்) அவர்கள் தளர்ச்சியடைய மாட்டார்கள். (அல் அன்பியா: 19:20)

அவர்களின் எண்ணிக்கையை அல்லாஹ்வையன்றி யாருமறியார். மி∴ராஜின் (விண்ணுலக யாத்திரையின்) போது தாம் கண்டதை நபியவர்கள் கூறியதாக அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: வானத்திலுண்டான பைதுல் ம∴மூர் அளவிலே உயர்த்திக் காண்பிக்கப்பட்ட போது அதிலே ஒவ்வொரு நாளும் எழுபது ஆயிரம் வானவர்கள் தொழுது கொண்டிருப்பார்கள். அவர்கள் அதனை விட்டும் வெளியேறினால் அதற்குள் மீண்டும் வரமாட்டார்கள். பிரிதொரு கூட்டத்தினர் நுழைந்து விடுவர்.(ஆதாரம்: புஹாரி 3207, முஸ்லிம் 162) (அதாவது அவர்கள் அதிகம்பேர் இருப்பதால் மறுமை வரை இன்னொரு சந்தர்ப்பம் கிடைக்காது).

**வானவர்களை ஈமான் கொள்ளல் நான்கு விடயங்களை உள்ளடக்கும்:**

1-மலக்குகள் என்ற படைப்பு இருக்கிறார்கள் என்பதை உறுதியுடன் ஈமான் கொள்ள வேண்டும்.

2-அவர்களில் பெயர் அறியப்பட்டவர்களை பெயருடனும், பெயர் அறியப்படாதவர்களை பொதுவாகவும் ஈமான் கொள்ள வேண்டும். ஜிப்ரீல் (அலை) அவர்களை பெயர் அறியப்பட்டவர்களுக்கு உதாரணமாகக் குறிப்பிடலாம்.

3-அவர்களின் வர்ணனை கூறப்பட்டவர்கள் அவ்விதமாகவே ஈமான் கொள்ள வேண்டும். உதாரணமாக விண்ணை மறைக்கக் கூடியளவான அறுநூறு இறக்கைகளைக் கொண்டு ஜிப்ரீல் (அலை) படைக்கப்பட்டிருந்தார்கள் என நபி (ஸல்) கூறினார்கள். (முஸ்லிம் 174)

மலக்குகள் அல்லாஹ்வின் கட்டளைப்படி மனிதர்களின் தோற்றமெடுத்து நடமாடுவார்கள். உதாரணமாக : மர்யம் (அலை) அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) சாதாரண ஒரு மனிதரின் தோற்றத்திலே சென்றார்கள். ரஸூல் (ஸல்) தனது தோழர்களுடன் அமர்ந்து கொண்டிருக்கும் போதும் ஜிப்ரீல் (அலை) ஒரு மனிதரது தோற்றத்திலே சென்றார்கள். (முஸ்லிம் 8) இது போலவே நபி இப்ராஹீம் (அலை), நபி லூத் (அலை) அவர்களிடத்திலும் மலக்குகள் மனிதரது தோற்றத்திலே சென்றுள்ளனர்.

4-அவர்களுக்கு இடப்பட்ட கட்டளைகளைப் பற்றியும் நாம் அறிந்தவற்றை ஈமான் கொள்ள வேண்டும். அவர்கள் அல்லாஹ்வை வணங்குவதிலும், துதிப்பதிலுமே

எப்போதும் எந்த வெறுப்பும் சலிப்பும் இல்லாமல் இருப்பார்கள். அதிலே அவர்களுக்கு சலிப்போ, கஷ்டமோ இருக்காது.

அவர்களில் சிலருக்கு குறிப்பான சில வேலைகள் பொறுப்பு கொடுக்கப்பட்டிருந்தன.

- ஜிப்ரீல் (அலை) அவர்கள் எல்லா தூதர்களுக்கும் இறைக்கட்டளைகளை கொண்டு செல்லும் பொறுப்பு கொடுக்கப்பட்டிருந்தார்கள்.
- மழை, பயிர்களுக்கு : மீகாயீல் (அலை) அவர்கள்.
- இறுதி நாளின் போது ஸூர் ஊத : இஸ்ராபீல் (அலை) அவர்கள்.
- உயிர்களைக் கைப்பற்றும் பொறுப்பு : மலகுல் மௌத் அவர்கள்.
- நரகத்திற்குப் பொறுப்பு : மாலிக் (அலை) அவர்கள்.
- மேலும் தாயின் கருவறையில் உள்ள சிசுவுக்குப் பொறுப்பாக ஒரு வானவர்.
- நான்கு மாதங்களின் பின்னர் பிரிதொரு மலக்கை அனுப்பி அச்சிசுவிற்கு தேவையான உணவு, அதன் செயல்பாடுகள், அது சீதேவியா, மூதேவியா போன்ற விடயங்களை எழுதவும் செய்வான்.
- மனிதர்களது செயல்களை கண்காணிக்க ஒரு வானவர்.
- அவர்களது அனைத்து செயல்பாடுகளை எழுதவும், வலப்புறத்திலும் இடப்புறத்திலுமாக இரண்டு மலக்குகள் சாட்டப்பட்டுள்ளனர்.
- அதேபோல் ஒருவர் மரணித்தால் அவர் பற்றிய விடயங்களை விசாரிப்பதற்காகவும் இரண்டு பேர் சாட்டப்பட்டுள்ளனர். அவர்கள் முன்கர், நகீர் ஆகிய இருவருமாவர். அவ்விருவரும் அவரிடத்தில் தனது இறைவன், மார்க்கம், நபி பற்றி விசாரிப்பார்கள்.

**வானவர்களை ஈமான் கொள்வதால் ஒரு மு.ஃமினிடத்தில் ஏற்படும் மாற்றங்கள்:**

❖ அல்லாஹ்வின் வல்லமையையும், ஆற்றலையும், அவனது ஆளுமையையும் அறிய முடிகிறது. படைப்புகளின் ஆற்றல் அவற்றை படைத்தவனின் ஆற்றலையே உணர்த்துகிறது.

❖ மனிதர்களது விடயத்திற்காக அல்லாஹ்விற்கு நன்றி செலுத்தத் தூண்டுகிறது. ஏனெனில் இவர்கள் மனிதர்களை கண்காணித்து, அவர்களது செயல்பாடுகளை குறித்தும் வருவதுடன் அவர்களது இன்னபிற நலன்களிலும் கவனம் செலுத்துகிறார்கள்.

❖ அவர்கள் மீது அன்பு வைப்பது ஒரு வணக்கமாக அமைகிறது.

**குறிப்பு** : ஒரு குழுவினர், மலக்குகள் உடலமைப்பைக் கொண்டவர்களல்லர் எனக் கூறுகின்றனர். மாற்றமாக அவர்கள் படைப்பினங்களில் ஒரு சிறந்த சக்தியைப் பெற்றவர்கள் என்கின்றனர். ஆனால் இது அல்குர்ஆனுக்கும், சுன்னாவிற்கும், அனைத்து முஸ்லிம்களின் கருத்துக்களையும் பொய்ப்படுத்துவதாக அமைகின்றது. இதனையே இறைவசனம் இவ்வாறு கூறுகிறது:

﴿ ٱلْحَمْدُ لِلَّهِ فَاطِرِ ٱلسَّمَٰوَٰتِ وَٱلْأَرْضِ جَاعِلِ ٱلْمَلَٰٓئِكَةِ رُسُلًا أُو۟لِىٓ أَجْنِحَةٍ مَّثْنَىٰ وَثُلَٰثَ وَرُبَٰعَ ﴾ فاطر: ١

அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும், அவன் வானங்களையும் பூமியையும் ஆரம்பமாகப் படைத்தவன். இரண்டிரண்டும், மும்மூன்றும், நன்நான்கும் இறக்கைகளுடைய வானவர்களை தூதர்களாக ஆக்கியவன். (பாதிர்:1)

# ஜின் (பற்றிய விளக்கம்)

பொதுவாகவே ஜின்கள் மறைவான ஒரு படைப்பாகும். இவர்கள் நெருப்பினால் படைக்கப்பட்டுள்ளனர். மனிதர்களைப் படைப்பதற்கு முன்னரே அல்லாஹ் அவர்களை படைத்து விட்டான். இதனையே இறைவசனம் இவ்வாறு கூறுகிறது:

﴿وَلَقَدْ خَلَقْنَا ٱلْإِنسَٰنَ مِن صَلْصَٰلٍ مِّنْ حَمَإٍ مَّسْنُونٍ ﴿٢٦﴾ وَٱلْجَآنَّ خَلَقْنَٰهُ مِن قَبْلُ مِن نَّارِ ٱلسَّمُومِ﴾ الحجر: ٢٦ - ٢٧

இன்னும் (தட்டினால்) சப்தம் வரக்கூடிய, மாற்றமடைந்த கறுப்பான களிமண்ணிலிருந்து (ஆதமை) திட்டமாக நாம் படைத்தோம். மேலும் ஜின்னை (அதற்கு) முன்னதாகக் கொடிய உருவமுள்ள நெருப்பிலிருந்து அதனை நாம் படைத்தோம். (அத் தாரியாத்: 56-58)

அவர்களும் அல்லாஹ்வின் ஏவல்களையும் விலக்கல்களையும் பெற்றிருக்கிறார்கள். அவர்களில் விசுவாசிகளும், நிராகரிப்பாளர்களுமுள்ளனர். இறைவனை வழிப்படக்கூடியவர்களும், மாறுசெய்யக்கூடியவர்களுமுள்ளனர். அவர்களைப்பற்றி இறைவசனம் இவ்வாறு கூறுகிறது:

﴿وَأَنَّا مِنَّا ٱلصَّٰلِحُونَ وَمِنَّا دُونَ ذَٰلِكَ ۖ كُنَّا طَرَآئِقَ قِدَدًا﴾ الجن: ١١

""மேலும், நிச்சயமாக நம்மில் நல்லோரும் இருக்கின்றனர், அப்படியல்லாதவர்களும் நம்மில் இருக்கின்றனர், நாம் பல்வேறு வழிகளையுடையவர்களாகவும் இருந்தோம்"". (அல்ஜின்: 11)

மேலும்:

அதாவது மனிதர்களைப் போலவே பல பிரிவினர்களாகவும், பல்வேறு சிந்தனைகளைக் கொண்டவர்களாகவும் உள்ளனர்.

மனிதர்களை போலவே அல்லாஹ்வை நிராகரித்த காபிர்கள் நரகிற்கும், விசுவாசித்தவர்கள் (மு.ஃமின்கள்) சுவர்க்கத்திற்கும் செல்வர் என்பதுவே அனைவரினதும் கருத்தாகும். இதனையே இறைவசனம் இவ்வாறு கூறுகிறது:

﴿وَلِمَنْ خَافَ مَقَامَ رَبِّهِۦ جَنَّتَانِ ﴿٤٦﴾ فَبِأَيِّ ءَالَآءِ رَبِّكُمَا تُكَذِّبَانِ﴾ الرحمن: ٤٦ - ٤٧

தன் இரட்சகனின் சன்னிதானத்தை பயந்தவருக்கு (சுவனபதியில்) இரு சோலைகளுண்டு. ஆகவே நீங்கள் இரு வகுப்பாரும் உங்களிருவரின் இரட்சகனுடைய அருட்கொடைகளில் எதனைப் பொய்யாக்குவீர்கள். (அர் ரஹ்மான் 46-47)

அவர்களுக்கு மத்தியிலும் மனிதர்களுக்கு மத்தியிலும் அநியாயம் தடை செய்யப்பட்ட ஒன்றாகும். குத்ஸியான ஒரு ஹதீஸில் அல்லாஹ் கூறுகிறான், என் அடியார்களே! என் மீது அநியாயம் செய்வதை ஹராமாக்கியுள்ளேன். அது போலவே உங்களுக்கு மத்தியிலும் அதனை ஹராமாக்கியுள்ளேன். எனவே நீங்கள் ஒருவருக்கொருவர் அநியாயம் செய்து கொள்ளாதீர்கள். (ஆதாரம் முஸ்லிம் 2577)

இது போலவே மனிதர்கள் ஜின்கள் மீதும், ஜின்கள் மனிதர்கள் மீதும் பகைமை பாராட்டக்கூடிய நிலைமைகள் உள்ளன.

மனிதர்கள், எலும்புகளின் மீதும், சாணத்தின் மீதும் சிறுநீர் கழிப்பது போன்ற செயல்கள் ஜின்கள் மீது பகைமை பாராட்டுவதாக அமையும்.

இப்னு மஸ்ஊத் (ரலி) அறிவிக்கும் ஹதீஸ் முஸ்லிமில் இடம் பெற்றுள்ளது. உணவு சம்பந்தமாக நபி (ஸல்) அவர்களை ஜின்கள் கேட்டார்கள். இறைவன் பெயர் சொல்லப்பட்ட அனைத்து எலும்புகளும் தாங்களின் உணவாகும். அவைகளை நீங்கள் சாப்பிடும் போது மனிதன் சாப்பிட்டதை விட அதில் மாமிசம் இருக்கும், இன்னும் ஒவ்வொரு மிருகத்தின் கழிவுகளும் உங்களது மிருகங்களுக்கான உணவாகும். எனவே நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள், நீங்கள் அவை இரண்டிலும் மல,ஜலம் கழிக்க வேண்டாம்.

மேலும் கூறினார்கள், நீங்கள் அவற்றின் மூலம் (எலும்பு, சாணம்) சிறுநீர் சுத்தம் செய்ய வேண்டாம். ஏனெனில் அவை உங்களது சகோதரர்களது உணவாகும். (ஆதாரம் முஸ்லிம்)

**ஜின்கள் மனிதர்கள் மீது காட்டும் பகைமை**

- தப்பபிப்பராயங்களை அவர்களது உள்ளங்களில் இட்டு அதில் ஆதிக்கம் செலுத்தும்.
- அவர்களுக்கு அச்சத்தை உண்டாக்கும். குறிப்பாக அவர்களை மனிதன் நாடிச் செல்லும் போது. இதனையே இறைவசனம் இவ்வாறு கூறுகிறது:

﴿وَأَنَّهُۥ كَانَ رِجَالٌ مِّنَ ٱلْإِنسِ يَعُوذُونَ بِرِجَالٍ مِّنَ ٱلْجِنِّ فَزَادُوهُمْ رَهَقًا﴾ **الجن**: ٦

இன்னும், நிச்சயமாக மனிதர்களிலுள்ள ஆண்கள் பலர், ஜின்களிலுள்ள ஆண்கள் பலரிடம் (தங்களைக்) காக்கத் தேடிக் கொண்டிருந்தனர், இதனால் அவர்கள் அவர்களுக்கு கர்வத்தை அதிகமாக்கிவிட்டார்கள். (அல் ஜின்: 6)

- மனிதனை ஜின் ஆட்கொண்டு எரிந்து விடுகிறது. இந்த ஆட்கொள்ளல் இரண்டு வகைப்படுகிறது

❖ ஜின் மனிதனை மூடிக் கொள்கிறது

❖ ஜின் மனிதனில் நுழைந்து நரம்புத்தளர்ச்சி ஏற்படுத்துகிறது.

# வேதங்களைக் கொண்டு ஈமான் கொள்ளல்

அல்லாஹ்விற்கு சில வேதங்கள் இருக்கின்றன. அவற்றை தனது நபிமார்களுக்கும், ரஸுல்மார்களுக்கும் இறக்கினான் என உறுதியாக ஈமான் கொள்ளலாகும். அல்குர்ஆன் அதற்கு முன்னர் உண்டான அனைத்து வேதங்களையும் மாற்றிற்று எனவும், எழுத்து, ஓசையை உள்ளடக்கிய தனது பேச்சாக அதனையே தேர்ந்தெடுத்துள்ளான் எனவும் ஈமான் கொள்ள வேண்டும்.

அல்லாஹ் தன் தூதர்களுக்கு அருளாகவும், அவனது படைப்புகளுக்கு நேர்வழிகாட்டியாகவும், அதன் மூலம் இவ்வுலகிலும் மறுவுலகிலும் விமோட்சனம் பெற வேண்டும் என்ற நோக்கில் அருளியவற்றையே (இறை) வேதங்கள் எனக் குறிப்பிடுகின்றோம்.

**வேதங்களை ஈமான் கொள்ளல் நான்கு விடயங்களை உள்ளடக்கும்.**

1-அவை உண்மையாகவே அல்லாஹ்விடமிருந்து இறங்கப்பட்டவை என ஈமான் கொள்ளல்.

2-அவற்றில் பெயர் குறிப்பிடப்பட்டவற்றை அந்தப் பெயர்களுடன் நம்ப வேண்டும். உதாரணமாக :

- அல்குர்ஆன் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும்,
- தௌராத் வேதம் மூஸா (அலை) அவர்களுக்கும்,
- இன்ஜீல் வேதம் ஈஸா (அலை) அவர்களுக்கும்,
- ஸபூர் வேதம் தாவுத் (அலை) அவர்களுக்கும்

அருளப்பட்டன என குறிப்பாகவும், ஏனைய பெயர் கூறப்படாதவற்றை பொதுவாகவும் ஈமான் கொள்ள வேண்டும்.

3-அவற்றில் கூறப்பட்டுள்ளவற்றை உண்மை என ஏற்றுக்கொள்ள வேண்டும். அல்குர்ஆனின் கூற்றையும், அதற்கு முன்னர் உண்டான வேதங்களின் கூற்றுகள்

திருத்தப்படாமலோ, மாற்றப்படாமலோ இருப்பின் அவற்றையும் உண்மை என ஏற்க வேண்டும்.

4-அது கூறக்கூடிய சட்டங்களை பின்னர் (அச்சட்டங்கள்) மாற்றப்படாமல் இருப்பின் அதனை செயல்படுத்த வேண்டும். மேலும் அவற்றிற்கு பூரணமாக கட்டுப்படவும் வேண்டும். அச்சட்டங்களின் நோக்கம் நமக்கு புரிந்தாலும், புரியாவிடினும் சரியே. முந்தைய அனைத்து வேதங்களும் அல்குர்ஆனின் வருகையால் மாற்றப்பட்டே உள்ளன. இதனை அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:

﴿وَأَنزَلْنَآ إِلَيْكَ ٱلْكِتَٰبَ بِٱلْحَقِّ مُصَدِّقًا لِّمَا بَيْنَ يَدَيْهِ مِنَ ٱلْكِتَٰبِ وَمُهَيْمِنًا عَلَيْهِ﴾ المائدة: ٤٨

மேலும் (நபியே முற்றிலும்) உண்மையைக் கொண்டுள்ள இவ்வேதத்தை நாம் உம்மீது இறக்கி வைத்துள்ளோம். இது வேதத்திலிருந்து தனக்கு முன்னுள்ளவற்றை உண்மையாக்கி வைக்கக்கூடியதாகும். அவற்றை பாதுகாப்பதாகவுமிருக்கின்றது. (அல் மாஇதா: 48)

எனவே அல்குர்ஆன் ஏற்றுக்கொள்ளாத, சரிகாணாத எந்தவொரு சட்டத்தையும் முந்தைய வேதங்களில் இருந்து பெறுவது ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

**வேதங்களை ஈமான் கொள்வதால் ஒரு மு∴மினிடத்தில் ஏற்படும் மாற்றங்கள்:**

- அல்லாஹ்விற்கு அடியார்கள் மீதுள்ள கரிசனையைக் காட்டுகிறது. ஏனெனில் ஒவ்வொரு கூட்டத்தினருக்கும் நேர்வழி காட்ட அவ்வப்போது வேதங்களை இறக்கியுள்ளான்.
- அல்லாஹ்வின் வல்லமையை உணர்த்துகிறது. ஒவ்வொரு சமூகத்திற்கும் பொருத்தமான வழிகாட்டல்களை அருளியுள்ளான். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:

﴿لِكُلٍّ جَعَلْنَا مِنكُمْ شِرْعَةً وَمِنْهَاجًا﴾ المائدة: ٤٨

உங்களில் ஒவ்வொரு வகுப்பார்களுக்கும் மார்க்கத்தையும், வழிமுறையையும் நாம் ஆக்கினோம். (அல் மாஇதா: 48)

- இவற்றிற்காக அல்லாஹ்விற்கு நன்றி கூறத் தோன்றுகிறது.

# இறைத்தூதர்களைக் கொண்டு ஈமான் கொள்ளல்

அல்லாஹ் ஒவ்வொரு சமூகத்தாருக்கும் தனது தூதர்களை அனுப்பினான் என உண்மையாக ஈமான் கொள்ளவேண்டும். அத்தூதர்கள் அல்லாஹ்வை விடுத்து வேறொருவரையும் வணங்கக் கூடாது என்றும் அவனுக்கு யாதொரு இணையும் வைக்கலாகாது என்றும் கூறிவந்துள்ளனர். அவர்கள் அனைவரும் இறைவிசுவாசிகளும், உண்மையாளர்களுமாவர். அவர்கள் அல்லாஹ்வின் தூதை தெளிவாக எடுத்துரைத்தார்கள் என்றும், அவனது அத்தாட்சிகளை மனிதர்கள் மீது எடுத்துக்காட்டினார்கள் என்றும் ஈமான் கொள்ளவேண்டும்.

தூதர்கள் என்றால், அனுப்பப்பட்டவர்கள், அதாவது ஒரு செய்தியை எத்தி வைக்க அனுப்பப்பட்டவர்கள்.

அல்லாஹ்வின் முதல் ரஸூல் நூஹ் (அலை) ஆவர். முஹம்மத் (ஸல்) அவர்கள் இறுதியானவராவார். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது

﴿إِنَّآ أَوۡحَيۡنَآ إِلَيۡكَ كَمَآ أَوۡحَيۡنَآ إِلَىٰ نُوحٖ وَٱلنَّبِيِّـۧنَ مِنۢ بَعۡدِهِۦۚ﴾ النساء: ١٦٣

(நபியே) நூஹுக்கும் அவருக்குப் பின் வந்த நபிமார்களுக்கும் நாம் வஹி அறிவித்தவாறே, உமக்கும் நிச்சயமாக நாம் வஹி அறிவித்தோம். (அந் நிஸா :163)

அனஸ் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள், ஷபாஅத் பற்றிக் கூறும் போது ரஸூல் (ஸல்) குறிப்பிட்டார்கள், மனிதர்கள் ஆதம் (அலை) அவர்களிடத்தில் சென்று தமக்காக பரிந்து பேசுமாறு கூறுவார்கள். அதற்கு நீங்கள் நபி நூஹிடம் செல்லுங்கள், அவர் தாம் அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட முதல் தூதராவார் எனபார். (ஆதாரம் புஹாரி 4476).

மேலும் அல்லாஹ் நபி (ஸல்) அவர்கள் விடயத்தில் பின்வருமாறு கூறுகிறான்:

﴿مَّا كَانَ مُحَمَّدٌ أَبَآ أَحَدٖ مِّن رِّجَالِكُمۡ وَلَٰكِن رَّسُولَ ٱللَّهِ وَخَاتَمَ ٱلنَّبِيِّـۧنَۗ﴾ الأحزاب: ٤٠

உங்களுடைய ஆண்களில் எவருக்கும் முஹம்மது தகப்பனாக இருக்கவில்லை, எனினும் அல்லாஹ்வுடைய தூதராகவும், நபிமார்களுக்கு இறுதி முத்திரையாகவும் (இறுதி நபியாகவும்) இருக்கிறார். (அல் அஹ்ஸாப்:40)

ஒவ்வொரு சமூகத்தாருக்கும் அல்லாஹ் தனது ரஸூல்மார்களை அனுப்பி அவர்களுக்காக ஒரு மார்க்கத்தை கொடுத்தேயுள்ளான். அல்லது நபிமார்களுக்கு வஹியனுப்பி முந்தைய மார்க்கத்தை புதுப்பித்துள்ளான். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது

﴿وَلَقَدۡ بَعَثۡنَا فِي كُلِّ أُمَّةٖ رَّسُولًا أَنِ ٱعۡبُدُواْ ٱللَّهَ وَٱجۡتَنِبُواْ ٱلطَّٰغُوتَۖ﴾ النحل: ٣٦

ஒவ்வொரு சமூகத்திலும் திட்டமாக நாம் ஒரு தூதரை அனுப்பியிருக்கிறோம் (அத்தூதர் அச்சமூகத்தவர்களிடம்) அல்லாஹ்வையே வணங்குங்கள், (அல்லாஹ் அல்லாத வணங்கப்படும் ஷைத்தான்களாகிய அனைத்து) தாகூத்திலிருந்தும் நீங்கள் விலகிக் கொள்ளுங்கள்(என்று கூறினார்கள்). (அந் நஹ்ல் :36)

இறைத்தூதர்கள் ருபூபிய்யத் எனும் இறைசக்தியோ, உலூஹிய்யத் எனும் வணங்கப்படும் சக்தியோ அவசியமின்றி படைக்கப்பட்டுள்ளனர். முஹம்மத் (ஸல்) அவர்கள் எல்லா தூதர்களுக்கும் தலைவராகவும், அல்லாஹ்விடத்தில் நபிமார்களில் அதிக மதிப்பிற்குறியவராகவுமிருந்தும் அவரைப் பற்றி பின்வருமாறு தான் கூறுகிறான் :

﴿قُل لَّآ أَمۡلِكُ لِنَفۡسِي نَفۡعٗا وَلَا ضَرًّا إِلَّا مَا شَآءَ ٱللَّهُۚ وَلَوۡ كُنتُ أَعۡلَمُ ٱلۡغَيۡبَ لَٱسۡتَكۡثَرۡتُ مِنَ ٱلۡخَيۡرِ وَمَا مَسَّنِيَ ٱلسُّوٓءُۚ إِنۡ أَنَا۠ إِلَّا نَذِيرٞ وَبَشِيرٞ لِّقَوۡمٖ يُؤۡمِنُونَ﴾ الأعراف: ١٨٨

(நபியே) நீர் கூறுவீராக, அல்லாஹ் நாடியதைத் தவிர எனக்கோ எவ்வித நன்மை(யைச் செய்வதற்)கும், தீமை(யைத் தடுத்துக் கொள்வதற்)கும் நான் சக்தி பெறமாட்டேன். மறைவானவற்றை நான் அறிந்தவனாக இருந்திருந்தால் நன்மைகளையே அதிகமாகத் தேடிக் கொண்டிருப்பேன். தீமை என்னைத் தொட்டிருக்காது. நான் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவனும், விசுவாசம் கொண்ட சமுதாயத்தினருக்கும் நன்மாராயங் கூறுபவனுமேயன்றி வேறில்லை. (அல் அ.்.ராப் : 188)

ரஸூல்மார்களும் மனிதர்களது அடிப்படைத் தேவைகளைப் பெற்றிருப்பர். உண்ணல், பருகள், சுகயீனம் அடைதல், மரணித்தல் போன்ற இன்னும் பல இவர்களுக்கும் பொதுவானவையே. இதனையே நபி இப்ராஹீம் (அலை) அவர்களைத் தொட்டும் அல்குர்ஆன் இவ்வாரு கூறுகிறது.

﴿وَٱلَّذِي هُوَ يُطۡعِمُنِي وَيَسۡقِينِ ٧٩ وَإِذَا مَرِضۡتُ فَهُوَ يَشۡفِينِ ٨٠ وَٱلَّذِي يُمِيتُنِي ثُمَّ يُحۡيِينِ﴾ الشعراء: ٧٩ - ٨١

இன்னும் அவன் எத்தகையவனென்றால் அவனே எனக்கு உணவளிக்கிறான், அவனே எனக்கு குடிக்கவும் தருகிறான். மேலும் நான் நோயுற்றுவிட்டால் அவனே என்னைக் குணப்படுத்துகிறான். இன்னும் அவன் எத்தகையவனென்றால் என்னை இறப்பெய்தச் செய்வான். பின்னர் என்னை (மறுமையில்) அவன் உயிர்ப்பிப்பான். (அஷ் ஷுஅரா : 79-81)

ரஸூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள், நிச்சயமாக நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதனே. உங்களுக்கு போன்றே எனக்கும் மறதியேற்படுகிறது. நான் (ஏதேனும் ஒரு விடயத்தை) மறந்துவிடின் ஞாபகப்படுத்துங்கள். (புஹாரி : 401)

அல்லாஹ் இறைத்தூதர்களைப் புகழும் போது அதிகபட்சமாகப் பயன்படுத்திய பண்பு அடிமைத்தனம் என்பதாகும். அடியார்களுடைய பண்புகளில் அதுவே அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பத்திற்குரியதாகும். அதனால்தான் அப்பண்பை தனது விருப்பத்திற்குரிய தூதர்களுக்குப் பயன்படுத்தியுள்ளான். நபி நூஹ் அவர்களைப் புகழும்போது அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:

﴿إِنَّهُۥ كَانَ عَبۡدٗا شَكُورٗا﴾ الإ سراء: ٣

நிச்சயமாக அவர் (அதற்கு) மிக்க நன்றி செலுத்தும் அடியாராகவே இருந்தார். (அல் இஸ்ராப்:3)

முஹம்மத் நபி (ஸல்) அவர்களைப் பற்றி கூறும் போது அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:

﴿تَبَارَكَ ٱلَّذِي نَزَّلَ ٱلۡفُرۡقَانَ عَلَىٰ عَبۡدِهِۦ لِيَكُونَ لِلۡعَٰلَمِينَ نَذِيرًا﴾ الفرقان: ١

தன் அடியார் (முஹம்மத் (ஸல்)) அவர்கள் மீது அசத்தியத்திலிருந்து சத்தியத்தைப் பிரித்தறிவிக்கும்) பு.்.ர்கானை அது அகிலத்தாருக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்யக் கூடியதாக ஆவதற்காக இறக்கி வைத்தானே அத்தகையோன் மிக்க பாக்கியமுடையவன். (அல் புர்கான்:1)

இவ்வாறே ஏனைய நபிமார்கள் ரஸூல்மார்கள் பற்றியும் அல்குர்ஆன் புகழ்ந்து கூறியுள்ளது.

**இறைத்தூதர்களை ஈமான் கொள்ளல் நான்கு விடயங்களை உள்ளடக்கும்.**

1. அவர்கள் கொண்டு வந்த தூது உண்மையானது எனவும், அது அல்லாஹ்விடமிருந்தே வந்துள்ளது எனவும் ஈமான் கொள்ளல் வேண்டும். அவற்றில் ஒருவரையேனும் நிராகரித்தால் ஏனைய எல்லா தூதர்களையும் நிராகரித்தவர் போலாவார். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

﴿ كَذَّبَتْ قَوْمُ نُوحٍ ٱلْمُرْسَلِينَ ﴾ الشعراء: ١٠٥

நூஹூடைய சமூகத்தார் (நம்மால் அனுப்பப்பட்ட) தூதர்களைப் பொய்யாக்கினார்கள். (அஷ் ஷுஅரா:105)

அவ்வேளை அவர்களிடம் ஒரேயொரு தூதர் மாத்திரமே இருந்தார். எனினும் அவரின் தூதை பொய்ப்பித்ததின் காரணமாக எல்லாத்தூதர்களையுமே பொய்யாக்கியதற்கு அல்லாஹ் சமமாக்கியுள்ளான்.

அவ்வாறே நஸாராக்கள் ஈஸா (அலை) அவர்களைப் பின்பற்றாதது மட்டுமன்றி முஹம்மத் (ஸல்) அவர்களையும் சேர்த்தே பொய்ப்பித்தனர். அவர்களுக்கு ரஸூல் (ஸல்) அவர்களது வருகை பற்றி முன்னறிவிப்பு செய்யப்பட்டே இருந்தது. அதாவது அல்லாஹ் அவர்களுக்கு தனது தூதரொருவரையனுப்பி, வழிகேட்டில் இருந்து காத்து நேர்வழியின் பால் இட்டுச் செல்வார் என்பதாகவே அம்முன்னறிவிப்பு இருந்தது.

2. அவர்களில் பெயர் குறிப்பிடப்பட்டவர்களை அவர்களுடைய பெயர்களுடன் ஈமான் கொள்ளல் வேண்டும்.

இவர்களில் உலுல் அஸ்ம் என்ற சிறப்பை பெற்ற முஹம்மத் (ஸல்), இப்றாஹீம் (அலை), மூஸா (அலை), ஈஸா (அலை), நூஹ் (அலை) ஆகிய ஐவரும் அடங்குவர். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:

﴿ وَإِذْ أَخَذْنَا مِنَ ٱلنَّبِيِّـۧنَ مِيثَٰقَهُمْ وَمِنكَ وَمِن نُّوحٍ وَإِبْرَٰهِيمَ وَمُوسَىٰ وَعِيسَى ٱبْنِ مَرْيَمَ ۖ وَأَخَذْنَا مِنْهُم مِّيثَٰقًا غَلِيظًا ﴾ الأحـ زاب: ٧

மேலும் நபிமார்களிடமிருந்தும் உம்மிடமிருந்தும், நூஹிடமிருந்தும் இன்னும் இப்றாஹீம், மூஸா, மர்யமுடைய மகன் ஈஸா ஆகியோரிடமிருந்தும் அவர்களின் உறுதி மொழியை நாம் எடுத்த சமயத்தில் அவர்களிடமிருந்து மிக்க உறுதியான உறுதிமொழியையே நாம் எடுத்தோம்.(என்பதை இவர்களுக்கு நினைவுபடுத்துவீராக). (அல் அஹ்ஸாப்:7)

அவர்களில் பெயர் அறியப்படாதவர்களைப் பொதுவாக நம்ப வேண்டும். இது பற்றி அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:

﴿ وَلَقَدْ أَرْسَلْنَا رُسُلًا مِّن قَبْلِكَ مِنْهُم مَّن قَصَصْنَا عَلَيْكَ وَمِنْهُم مَّن لَّمْ نَقْصُصْ عَلَيْكَ ﴾ غافر: ٧٨

மேலும் நபியே திட்டமாக நாம் உமக்கு முன்னர் (பல) தூதர்களை அனுப்பியிருக்கிறோம். அவர்களில் சிலருடைய வரலாற்றை நாம் உமக்குக் கூறி இருக்கறோம். இன்னும் அவர்களில் சிலருடைய வரலாற்றை நாம் உமக்கு கூறவில்லை. (மு∴மின் :78)

3-அவர்கள் பற்றிய விடயங்கள் உண்மை என ஏற்றுக்கொள்ள வேண்டும்.

4-இறுதி நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் கொணடு வந்த படியே செயல்பட வேண்டும். ஏனெனில் அவர்கள் எல்லா மனிதர்களுக்கும் பொதுவானராகவே அனுப்பட்டுள்ளார். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

﴿ فَلَا وَرَبِّكَ لَا يُؤْمِنُونَ حَتَّىٰ يُحَكِّمُوكَ فِيمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لَا يَجِدُوا۟ فِىٓ أَنفُسِهِمْ حَرَجًا مِّمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوا۟ تَسْلِيمًا ﴾ النساء: ٦٥

ஆனால் உமதிரட்சகன் மீது சத்தியமாக, தங்களுக்குள் ஏற்பட்ட சச்சரவில் உம்மை நீதிபதியாக ஆக்கி, நீர் செய்யும் தீர்ப்பைப் தங்கள் மனங்களில் எத்தகைய அதிருப்தியையும் பெறாமல் முற்றிலும் ஏற்றுக் கொள்ளாத வரையில் அவர்கள் விசுவாசிகளாக மாட்டார்கள். (அந் நிஸா : 65)

**இறைத்தூதர்களை ஈமான் கொள்வதால் ஒரு மு.ஃமினிடத்தில் ஏற்படும் மாற்றங்கள்:**

- ❖ அல்லாஹ்வினது அருளையும், அவன் தனது அடியார்கள் மீது கொண்டுள்ள கரிசனையையும் உணர முடிகிறது. அல்லாஹ் தனது தூதர்களை மக்களை நேர்வழிப்படுத்தவே அனுப்பினான். அவனை வணங்குவது எப்படி என்று அவர்களே தெளிவுபடுத்தினர். ஏனெனில் மனித அறிவு அதனை விளங்கிக் கொள்ள துனை போகாது என்பதனால்.
- ❖ அளப்பரிய இந்த அருளை வழங்கியதற்காக அவனுக்கு நன்றி கூற முடிகிறது.
- ❖ அவர்கள் மீது அன்பு கொள்ளவும், அவர்களைப் புகழவும், அவர்கள் கூறியவிதம் கண்ணியப்படுத்தவும் முடிகிறது. ஏனெனில் அவர்கள் அல்லாஹ்வின் தூதர்களாவர். மேலும் அவர்கள் அல்லாஹ்வை வணங்குவதிலும், அவனது தூதை எத்திவைப்பதிலும், அது பற்றி மக்களுக்கு உபதேசம் புரிபவர்களாகவுமே இருந்துள்ளனர்.

சில பிடிவாதக்காரர்கள் இறைத்தூதர்கள் மனிதர்களாக வர முடியாது எனக் கூறி அவர்களை பொய்ப்பித்துள்ளனர். இவர்களது இவ்வபிப்பிராயத்தை நிராகரித்து அல்லாஹ் இவ்வாறு கூறுகிறான்.

﴿وَمَا مَنَعَ ٱلنَّاسَ أَن يُؤْمِنُوٓا۟ إِذْ جَآءَهُمُ ٱلْهُدَىٰٓ إِلَّآ أَن قَالُوٓا۟ أَبَعَثَ ٱللَّهُ بَشَرًا رَّسُولًا ﴿٩٤﴾ قُل لَّوْ كَانَ فِى ٱلْأَرْضِ مَلَٰٓئِكَةٌ يَمْشُونَ مُطْمَئِنِّينَ لَنَزَّلْنَا عَلَيْهِم مِّنَ ٱلسَّمَآءِ مَلَكًا رَّسُولًا﴾ الإ سراء: ٩٤ - ٩٥

மனிதர்களை அவர்களிடம் நேர் வழி வந்த சமயத்தில் அல்லாஹ் ஒரு மனிதரையா(தன்) தூதராக அனுப்பிவைத்தான் என்று அவர்கள் கூறுவதைத் தவிர அவர்கள் விசுவாசங் கொள்வதை (வேறேதுவும்) தடுக்கவில்லை. (அதற்கு) நீர் கூறுவீராக பூமியில் மலக்குகள் (வசித்து) இருந்து (அதில்) அவர்கள் நிம்மதியுடைவயாராக நடந்து திரிந்து கொண்டிருந்தால், நிச்சயமாக நாம் வானத்தில் இருந்து ஒரு மலக்கையே (நம்முடைய) தூதராக அவர்களிடம் இறக்கி வைத்திருப்போம். (அல் இஸ்ரா : 94,95)

# இறுதி நாளைக் கொண்டு ஈமான் கொள்ளல்

அல்லாஹ் தனது திருமறையிலும், நபி (ஸல்) அவர்கள் தனது பொன்மொழிகளிலும் அறிவித்துள்ள, மரணத்திற்குப் பின் நிகழக்கூடிய : மண்ணறை வாழ்கை, அதன் இன்ப துன்பங்கள், இறுதி நாளில் மீண்டும் எழுப்பப்படல், மஹ்ஷர் மைதானத்தில் ஒன்று சேருதல், விசாரணை, தராசு, ஏடு வழங்கப்படல், நீர் தடாகம், ஸிராதுல் முஸ்தகீம் எனும் பாலம், சிபார்ஷு, சுவனம், நரகம், அவ்விரண்டிலும் நுழைபவர்களுக்கு அல்லாஹ் தயாரித்துள்ள இன்ப துன்பங்கள், மறுமை நாளின் சிறிய, பெரிய அடயாளங்கள் ஆகிய அனைத்தையும் உறுதியாக நம்புவதே இறுதி நளைக்கொண்டு ஈமான் கொள்வதாகும். அல்லாஹ் மனிதர்களை மரணிக்கச் செய்து கேள்வி கணக்கிற்காகவும் அவற்றின் பிரகாரம் கூலி கொடுப்பதற்காகவும் மீள எழுப்பும் நாளே இறுதி நாள் எனப்படும். ஏனெனில் இதற்கு பின்னர் ஒரு நாள் இருக்க மாட்டாது. சுவர்க்கத்திற்குரியவர்கள் சுவனத்திலும் நரகிற்குரியவர்கள் நரகிலும் நிரந்தரம் பெறுவார்கள்.

**இறுதி நாளை ஈமான் கொள்வது மூன்று விடயங்களை உள்ளடக்கும்.**

1. **மீள எழுப்பப்படுவது பற்றி ஈமான் கொள்ளல்:-** இரண்டாவது ஸூர் ஊதப்பட்டதும் இறந்தவர்களுக்கு மீண்டும் உயிரளிக்கப்படும். மனிதர்கள் பாதணியற்றவர்களாகவும், நிர்வாணமானவர்களாகவும், கத்னா செய்யப்படாதவர்களாகவும் இறைவன் முன் நிறுத்தப்படுவார்கள். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

﴿ كَمَا بَدَأْنَآ أَوَّلَ خَلْقٍ نُّعِيدُهُۥ ۚ وَعْدًا عَلَيْنَآ ۚ إِنَّا كُنَّا فَٰعِلِينَ ﴾الأنبياء: ١٠٤

முதல் படைப்பை நாம் ஆரம்பித்தது போன்றே அதை நாம் (திரும்பவும்) மீளவைப்போம். (இது) நம்மீது கட்டாயமான வாக்குறுதியாகும். நிச்சயமாக நாம் (இதை) செய்வோராய் இருக்கிறோம். (அல் அன்பியா:104)

அல் குர்ஆனினதும், ஸுன்னாவினதும், அனைத்து முஸ்லிம் அறிஞர்களினதும் கூற்றுப்படி மீள எழுப்பப்படுவது நிச்சயம் நிகழக்கூடிய ஒன்றே. இதனை அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

﴿ثُمَّ إِنَّكُم بَعْدَ ذَٰلِكَ لَمَيِّتُونَ ۝١٥ ثُمَّ إِنَّكُمْ يَوْمَ ٱلْقِيَٰمَةِ تُبْعَثُونَ ﴾ المؤمنون: ١٥ - ١٦

(மனிதர்களே) பின்னர் நிச்சயமாக நீங்கள் இறக்கக்கூடியவர்கள். பின்னர் மறுமை நாளின் போது நிச்சயமாக நீங்கள் (உயிர் கொடுத்து) எழுப்பப்படுவீர்கள். (அல் மு..மினூன்:15-16)

ரஸூல் (ஸல்) அவர்களும், இறுதி நாளின் போது மனிதர்கள் பாதணியற்றவர்களாகவும், நிர்வாணமானவர்களாகவும், கத்னா செய்யப்படாதவர்களாகவுமே எழுப்பப்படுவர் என்றார்கள். (புஹாரி 3349, முஸ்லிம் 2860)

இஸ்லாமிய அறிஞர்களும் இதன் நிகழ்வை ஏகோபித்து உறுதிப்படுத்தியுள்ளனர். இது புத்திக்கும் எட்டக் கூடிய ஒரு அம்சமாகும். அல்லாஹ் தன் தூதர்கள் மூலம் மக்களுக்கு புரியவைத்ததன் பிரகாரமும், படைப்பாளர்களான மக்கள் செய்தவற்றிற்கு கூலியளிக்கப்படுவதற்காகவுமே இவ்வாறான ஒரு நிகழ்வை ஏற்படுத்தியுள்ளான். அல்குர்ஆன் இதனையே இவ்வாறு கூறுகிறது.

أَفَحَسِبْتُمْ أَنَّمَا خَلَقْنَٰكُمْ عَبَثًا وَأَنَّكُمْ إِلَيْنَا لَا تُرْجَعُونَ المؤمنون: ١١٥

உங்களை நாம் படைத்ததெல்லாம் வீணுக்காகத்தான் என்றும் நிச்சயமாக நீங்கள் நம்மிடம் மீட்டப்படமாட்டீர்கள் என்றும் நீங்கள் எண்ணிக் கொண்டிருந்தீர்களா? (என்றும் கூறுவான்) (அல் மு..மினூன்:115)

அல்லாஹ் ரஸுல் (ஸல்) அவர்களைப் பார்த்து இவ்வாறு கூறுகிறான்:-

﴿إِنَّ ٱلَّذِى فَرَضَ عَلَيْكَ ٱلْقُرْءَانَ لَرَآدُّكَ إِلَىٰ مَعَادٍ﴾ القصص: ٨٥

(நபியே) நிச்சயமாக உம்மீது இந்தக் குர்ஆனை விதியாக்கி (இறக்கி)யவன் உம்மை மீளுமிடத்தின் பால் திரும்பச் சேர்த்து வைப்பவனாவான். (அல் கஸஸ் :85)

2. **விசாரணை, அதற்கேற்ப கூலி வழங்கல் பற்றி ஈமான் கொள்ளல்:-** அடியான் தனது செயல்களுக்காக கேள்வி கேட்கப்பட்டு, அதற்கேற்ப கூலியும் கொடுக்கப்படுவான். அல் குர்ஆனினதும், ஸுன்னாவினதும், அனைத்து முஸ்லிம் அறிஞர்களினதும் கூற்றுப்படி கேள்வி கேட்கப்படுவதும், அதற்கேற்ப கூலி கொடுக்ககப்படுவதும் நிச்சயம் நிகழக்கூடிய ஒன்றே. இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

﴿إِنَّ إِلَيْنَآ إِيَابَهُمْ ۝٢٥ ثُمَّ إِنَّ عَلَيْنَا حِسَابَهُم﴾ الغاشية: ٢٥ - ٢٦

நிச்சயமாக அவர்களின் மீட்சி நம் பக்கமேயாகும். பின்னர் நிச்சயமாக அவர்களைக் கேள்வி கணக்கு கேட்பது நம்மீதேயாகும். (அல் காஷியா:25-26)

நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள், மறுமை நாளில் அல்லாஹ் அடியானிடம் நெருங்கி அவனை யாரும் பார்க்காவிதத்தில் அவனை மறைப்பபான். பின்பு இறைவன் அவன் உலகில் செய்த பாவங்களை ஞாபகப்படுத்துவான். அவைகளை ஆம் இறைவனே என்று ஏற்றுக்கொண்ட பின்னர், நான் அழிந்து விட்டேன் என மனிதன் எண்ணுவான். பின்பு இறைவன் அவைகளை நான் உலகத்தில் மறைத்து விட்டேன். இன்று நான் அவற்றை உனக்காக மன்னிக்கிறேன் என்று அவனது நன்மை ஏடு கொடுக்கப்படும். ஆனால் இறைவன் நிராகரித்தவர்களையும், நயவஞ்சகர்களையும் பகிரங்கமாக அழைப்பான். இதைக் குர்ஆன் தெளிவுபடுத்துகிறது:

﴿وَيَقُولُ ٱلْأَشْهَـٰدُ هَـٰٓؤُلَآءِ ٱلَّذِينَ كَذَبُوا۟ عَلَىٰ رَبِّهِمْ ۚ أَلَا لَعْنَةُ ٱللَّهِ عَلَى ٱلظَّـٰلِمِينَ﴾ هود: ١٨

மேலும் இவர்கள் தாம் தங்கள் இரட்சகன் மீது பொய்யுரைத்தவர்கள் என்று (மலக்குகளான) சாட்சிகள் கூறுவார்கள், அநியாயக்காரர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டென்பதை (நபியே நீர்) அறிந்து கொள்வீராக. (ஹுூத் : 18) (புஹாரி : 4685, முஸ்லிம் : 2768)

அனைத்து முஸ்லிம் அறிஞர்களும் கேள்வி கேட்கப்படுவதும், அதற்கேற்ப கூலியளிக்கப்படுவதுமான இந்நிலையை உறுதிப்படுத்தியுள்ளனர். மேலும் இது அல்லாஹ்வின் ஏற்பாட்டினின்றும் உள்ளதாகும்.

3. **சுவர்க்கம், நரகம் பற்றி ஈமான் கொள்ளல்:-**

இவையிரண்டுமே படைப்பினங்களது நிரந்தர இருப்பிடமாகும். ஈமான் கொண்டு அல்லாஹ் ஏவியதன் பிரகாரம் செயல்பட்டு, அவனை தூய்மையுடன் வழிப்பட்டு, அவனது தூதர்களை பின்பற்றி வாழ்ந்த நல்லடியார்களுக்கு தயார் செய்யப்பட்டுள்ள இடமே சுவர்க்கமாகும்.

அதன் சிறப்பை எந்த கண்களும் அதற்கு முன்னர் பார்த்திருக்கவோ, காதுகளும் கேட்டிருக்கவோ, உள்ளங்கள் கற்பனை செய்து பார்த்திருக்கவோ முடியாத பல இன்பங்கள் அதில் உள்ளன. இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

﴿إِنَّ ٱلَّذِينَ ءَامَنُوا۟ وَعَمِلُوا۟ ٱلصَّـٰلِحَـٰتِ أُو۟لَـٰٓئِكَ هُمْ خَيْرُ ٱلْبَرِيَّةِ ۝٧ جَزَآؤُهُمْ عِندَ رَبِّهِمْ جَنَّـٰتُ عَدْنٍ تَجْرِى مِن تَحْتِهَا ٱلْأَنْهَـٰرُ خَـٰلِدِينَ فِيهَآ أَبَدًا ۖ رَّضِىَ ٱللَّهُ عَنْهُمْ وَرَضُوا۟ عَنْهُ ۚ ذَٰلِكَ لِمَنْ خَشِىَ رَبَّهُۥ﴾ البينة: ٧ - ٨

நிச்சயமாக விசுவாசங் கொண்டு, நற்செயல்களையும் செய்கின்றார்களோ அத்தகையோர் தாம் படைப்புகளில் மிகச் சிறந்தவர்கள். அவர்களுடைய நற்கூலி

அவர்களின் இரட்சகனிடம் (அத்னு எனும்) நிலையான சுவனங்களாகும். அவற்றின் கீழ் ஆறுகள் ஓடிக் கொணடிருக்கும், என்றென்றும் அவற்றில் நிரந்தரமாக தங்கி இருப்பவர்கள். அல்லாஹ்வும் அவர்களைப் பொருந்திக் கொண்டான். அவர்களும் அல்லாஹ்வைப் பொருந்திக் கொண்டார்கள். அது எவர் தன் இரட்சகனுக்குப் பயப்படுகிறாரோ, அவருக்குரியதாகும். (அல் பய்யினா:7-8)
மேலும் இறைவன் கூறுகிறான் :

﴿فَلَا تَعْلَمُ نَفْسٌ مَّآ أُخْفِىَ لَهُم مِّن قُرَّةِ أَعْيُنٍ جَزَآءًۢ بِمَا كَانُوا۟ يَعْمَلُونَ﴾ ال سجدة: ١٧

ஆகவே, அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றிற்கு கூலியாக, அவர்களுக்காக மறைத்து வைக்கப்படடிருக்கும் கண்களின் குளிர்ச்சியை எந்த ஒரு ஆத்மாவும் அறியாது. (அஸ் ஸஜ்தா:17)
அல்லாஹ்வை நிராகரித்து அவனது தூதர்களை பொய்ப்பித்து அநியாயம் இழைத்துக் கொண்டிருந்தவர்களுக்கு தயார் செய்யப்பட்டுள்ள இடமே நரகமாகும். இங்கு வேதனை மாத்திரமே அளிக்கப்படும்.
அங்கு அளிக்கப்படும் வேதனையும், தண்டனையும் உள்ளங்களால் கற்பனை பண்ண முடியாதளவு கடுமையாக இருக்கும். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

﴿وَٱتَّقُوا۟ ٱلنَّارَ ٱلَّتِىٓ أُعِدَّتْ لِلْكَـٰفِرِينَ﴾ آل عمران: ١٣١

இன்னும் (நரக) நெருப்பிற்கு பயந்து கொள்ளுங்கள், அது எத்தகையதென்றால், (இரட்சகனுடைய இக்கட்டளையை) நிராகரிப்போருக்காகத் தயார் படுத்தப்பட்டுள்ளது. (ஆல இம்ரான் :131)
மேலும் இறைவன் கூறுகிறான் :

﴿إِنَّآ أَعْتَدْنَا لِلظَّـٰلِمِينَ نَارًا أَحَاطَ بِهِمْ سُرَادِقُهَا ۚ وَإِن يَسْتَغِيثُوا۟ يُغَاثُوا۟ بِمَآءٍ كَٱلْمُهْلِ يَشْوِى ٱلْوُجُوهَ ۚ بِئْسَ ٱلشَّرَابُ وَسَآءَتْ مُرْتَفَقًا﴾ الكهف: ٢٩

அநியாயக்காரர்களுக்கு நிச்சயமாக நாம் நரகத்தை தயார்படுத்தியுள்ளோம். அந்நரகத்தின் சுவர்கள் அவர்களை சூழ்ந்து கொண்டு விட்டது.(அவர்கள் தண்ணீர் கேட்டு) இரட்சிக்கத் தேடினால், சூட்டின் உச்சத்தை அடைந்த பழுக்கக் காய்ச்சப்பட்டதை போன்ற தண்ணீரைக் கொண்டே அவர்கள் இரட்ச்சிக்கப்படுவார்கள், அது அவர்களுடைய முகங்களைச் சுட்டுக் பொசுக்கி விடும் (அன்றி) அது மிக்க கெட்ட பானமாகும், அவர்கள் இளைப்பாற இறங்குமிடத்தாலும் அது மிகக் கெட்டதாகும். (அல் கஹ்ஃப்:29)

**இறுதி நாளை ஈமான் கொள்வதால் ஒரு முஃமினிடத்தில் ஏற்படும் மாற்றங்கள்.**

- இறுதி நாளின் போது கிடைக்கவிருக்கும் கூலிக்காக அல்லாஹ்விற்கு முற்றிலும் வழிப்படுவதற்கு ஆசையேற்படுகிறது.
- இறுதி நாளின் போது கிடைக்கவிருக்கும் தண்டனையைப் பயந்து பாவங்களை விட்டும் ஒதுங்கி வாழத் தூண்டுகிறது.
- மனிதன் விரும்பக் கூடிய ஒன்றை உலகில் இழந்து விட்டால் இதை விட சிறப்பான சுகண்டியை, கூலியை மறுமையில் இறைவனிடம் பெறலாம் என்று ஆறுதல் பெறச் செய்கிறது.

**மரணத்திற்கு பின்னர் மீள எழுப்பப்படுவதை மறுப்போருக்கான பதில்**

மரணத்திற்கு பின்னர் மீள எழுப்பப்படுவதை காபிர்கள் நிராகரிக்கின்றனர். இது ஒரு தவறான அபிப்பிராயம் எனவும், இது நிகழமுடியாது எனவும் கூறுகின்றனர். எனினும் இறைவழிகாட்டலும், நடைமுறை நிகழ்வுகளும், பகுத்தறிவும் இவ்வாறான ஒரு நிகழ்வு ஏற்படக் கூடியது சாத்தியமே என்கின்றன.

**இதற்கான மறுப்பு:**

இறைவழிகாட்டல்:- அல்லாஹ் கூறுகிறான்:

﴿زَعَمَ ٱلَّذِينَ كَفَرُوٓاْ أَن لَّن يُبۡعَثُواْۚ قُلۡ بَلَىٰ وَرَبِّي لَتُبۡعَثُنَّ ثُمَّ لَتُنَبَّؤُنَّ بِمَا عَمِلۡتُمۡۚ وَذَٰلِكَ عَلَى ٱللَّهِ يَسِيرٞ﴾ التغابن: ٧

(மரணித்த பின்னர் நிச்சயமாக உயிர் கொடுத்து) அவர்கள் எழுப்பப்படவே மாட்டார்கள் என்று நிராகரிப்போர் எண்ணிக் கொண்டிருக்கினறனர்.(நபியே) நீர் கூறுவீராக, அவ்வாறல்ல என் இரட்சகன் மீது சத்தியமாக நிச்சயமாக நீங்கள் எழுப்பப்படுவீர்கள், பின்னர் நீங்கள் செய்து கொண்டிருந்தவைகளைப் பற்றி நிச்சயமாக நீங்கள் அறிவிக்கப்படுவீர்கள், மேலும் (அவ்வாறு செய்வது) அல்லாஹ்வுக்கு மிக்க எளிதானதாகும். (அத் தகாபுன்:7)
இவ்வாறே ஏனைய எல்லா இறை வேதங்களிலும் கூறப்பட்டுள்ளன.

நடைமுறை நிகழ்வுகள் :-
இவ்வுலகிலே அல்லாஹ் தன் அடியார்களுக்கு இறந்தவர்களை உயிர்ப்பித்து காட்டியுள்ளான். ஸூரதுல் பகராவில் இதற்கு ஐந்து உதாரணங்கள் உள்ளன.
1. நாம் அல்லாஹ்வை நேரடியாக காணும் வரை ஈமான் கொள்ள மாட்டோம் என மூஸா (அலை) அவர்களது கூட்டத்தார் கூறிய சமயம், அல்லாஹ் அவர்களை மரணிக்கச்செய்து பின்னர் உயிர் பெறச் செய்தான். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது.

﴿وَإِذۡ قُلۡتُمۡ يَٰمُوسَىٰ لَن نُّؤۡمِنَ لَكَ حَتَّىٰ نَرَى ٱللَّهَ جَهۡرَةٗ فَأَخَذَتۡكُمُ ٱلصَّٰعِقَةُ وَأَنتُمۡ تَنظُرُونَ ٥٥ ثُمَّ بَعَثۡنَٰكُم مِّنۢ بَعۡدِ مَوۡتِكُمۡ لَعَلَّكُمۡ تَشۡكُرُونَ﴾ البقرة: ٥٥ - ٥٦

மூஸாவே நாங்கள் அல்லாஹ்வை கண்கூடாகக் காணும் வரை உம்மை நாம் விசுவாசிக்கவே மாட்டோம். என்று நீங்கள் கூறியதையும் அப்பால் நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போழுதே உங்களை இடி முழக்கம் பிடித்துக் கொண்டதையும் (நீங்கள் நினைவு கூறுங்கள்). பின்னர் நீங்கள் நன்றி செலுத்துவதற்காக நீங்கள் இறந்து விட்டதற்குப் பின்னர் உங்களை நாம் (உயிர்ப்பித்து) எழுப்பினோம். (அல் பகரா 55-56)
2. பனூ இஸ்ரவேலர்கள் ஒருவரை கொலை செய்து அவ்விடயத்தில் கருத்து வேறுபாடு கொண்டனர். (அல் பகரா 73)
3. ஆயிரக்கணக்கானவர்கள் மரணத்திற்கு பயந்து தங்களது வீடுகளை விட்டும் விரண்டோடிய சமயம் அல்லாஹ் அவர்களை மரணிக்கச் செய்து பின்னர் உயிர் பெறச் செய்த சம்பவம். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது. (அல் பகரா :243)
4. ஒரு கிராமத்தில் மரணித்த ஒரு உடலுக்கு பக்கத்தில் ஒருவர் நடந்து செல்லும் போது அல்லாஹ் இவரை மீண்டும் எவ்வாறு உயிர் பெறச் செய்வார் என்றார். அப்போது அல்லாஹ் அவரை நூறாண்டுகள் மரணிக்கச் செய்து பின்னர் உயிர் பெறச் செய்தான். (அல் பகரா :259)

5. இப்ராஹீம் (அலை) மரணித்தவர்களை எவ்வாறு உயிர் பெறச் செய்கிறாய் என்று அல்லாஹ்விடம் கேட்ட சம்பவத்தை அல்லாஹ் கூறுகிறான். (அல் பகரா :260)

இவை நடைமுறையில் இடம் பெற்ற உண்மையான உதாரணங்களாகும். ஈஸா (அலை) அவர்கள் இறந்தவர்களை உயிர் பெறச் செய்யவும், அவர்களை அல்லாஹ்வின் உத்தரவின் பேரில் மண்ணறையில் இருந்து வெளியில் கொண்டு வரும் ஆற்றல் பெற்றிருந்ததையும் முன்னர் குறிப்பிட்டோம்.

மீள எழுப்பப்படுவதற்கு புத்திரீதியாக இரண்டு ஆதாரங்கள் உள்ளன

- வானங்கள் பூமி அதிலுள்ளவை அனைத்தையும் அல்லாஹ்வே படைத்தான். இவற்றை படைக்க ஆற்றல் பெற்றவனுக்கு அதனை மீள கொண்டுவர முடியாதா என்ன? இதனையே அல்லாஹ் இவ்வாறு கேட்கிறான்.

﴿وَهُوَ ٱلَّذِى يَبْدَؤُا۟ ٱلْخَلْقَ ثُمَّ يُعِيدُهُۥ وَهُوَ أَهْوَنُ عَلَيْهِ﴾ الروم: ٢٧

அவன் எத்தகையவன் என்றால் படைப்பை (முன் மாதிரியின்றியே ஆரம்பமாக) அவன் தொடங்குகின்றான். பின்னர் அதை அவன் மீளவைக்கிறான் இது அவனுக்கு மிகவும் எளிதானதாகும். (அர் ரூம்:27)

- பூமி காய்ந்து வறண்டு இருக்கும் போது மழையைப் பெய்வித்து மரங்களையும், புற்பூண்டுகளையும் முளைக்கச் செய்து அதற்கு உயிரைக் கொடுத்தான். அப்படியாயின் மனிதர்களை இறக்கச் செய்து பின்னர் உயிர் பெறச் செய்வது அவனால் இயலாத காரியமா என்ன? இதனையே அல்லாஹ் இவ்வாறு கேட்கிறான்.

﴿وَمِنْ ءَايَٰتِهِۦٓ أَنَّكَ تَرَى ٱلْأَرْضَ خَٰشِعَةً فَإِذَآ أَنزَلْنَا عَلَيْهَا ٱلْمَآءَ ٱهْتَزَّتْ وَرَبَتْ ۚ إِنَّ ٱلَّذِىٓ أَحْيَاهَا لَمُحْىِ ٱلْمَوْتَىٰٓ ۚ إِنَّهُۥ عَلَىٰ كُلِّ شَىْءٍ قَدِيرٌ﴾ فصلت: ٣٩

(நபியே) காய்ந்து விட்டதாக பூமியை நிச்சயமாக நீர் காண்பதும், அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளதாகும், அதன் மீது நாம் நீரை இறக்கி வைத்தால் அது செழிப்படைந்து வளர்கிறது. அதை நிச்சயமாக உயிர்ப்பித்தானே அத்தகையவன் மரணித்தோரையும் உயிர்ப்பிக்கக்கூடியவனாவான், நிச்சயமாக அவன் ஒவ்வொரு பொருளின் மீதும் ஆற்றலுடையவன். (ஹாமீம் ஸஜ்தா:39)

**மண்ணறை வாழ்கையின் இன்ப, துன்பங்களும் அதனை மறுப்போருக்கான பதிலும்**

இறுதி நாளை ஈமான் கொள்வதோடு இறப்பின் பின் நிகழக்கூடிய அனைத்தையும் ஈமான் கொள்ளவேண்டும்.

அ. **மண்ணறையின் நிகழ்வுகள்:**

இது மரணித்தவரிடத்து (அடக்கம் செய்யப்பட்ட பின்னர்) கேட்கப்படும் கேள்விகளைக் குறிக்கும். அவனிடத்தில் நீர் ஏற்றிருந்த உனது ரப்பு யார்? உனது மார்க்கம் என்ன? நீர் பின்பற்றிய தூதர் யார்? என்பன போன்ற கேள்விகள் கேட்கப்படும். மு.ஃ.மின்களை அல்லாஹ் சரியான பதில்கள் மூலம் நிலைபெறச் செய்வான்.

அப்போது மு.ஃ.மின்கள் எனது ரப்பு அல்லாஹ், எனது மார்க்கம் இஸ்லாம், எனது தூதர் முஹம்மத் (ஸல்) என்று பதிலளிப்பர். காபிர்களை இறைவன் வழிதவறச் செய்து விடுவான். அப்போது நான் அறியேன் என்பான். முனா.ஃ.பிக்குகள் மனிதர்கள் ஏதோ கூறிக்கொண்டிருந்தனர். அதனையே நாமும் கூறினோம். எனவே அவற்றிற்குறிய பதிலை நாம் அறியோம் என்பர்.

ஆ. **மண்ணறையின் இன்பமும் துன்பமும்:-**

அல்லாஹ்வை நிராகரித்த காபிர்களுக்கும், முனாபிக்குகளுக்கும், அநியாயம் பண்ணிக் கொண்டிருந்தவர்களுக்குமே மண்ணறையில் வேதனையளிக்கப்படும். இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:

﴿وَمَنْ أَظْلَمُ مِمَّنِ ٱفْتَرَىٰ عَلَى ٱللَّهِ كَذِبًا أَوْ قَالَ أُوحِىَ إِلَىَّ وَلَمْ يُوحَ إِلَيْهِ شَىْءٌ وَمَن قَالَ سَأُنزِلُ مِثْلَ مَآ أَنزَلَ ٱللَّهُ ۗ وَلَوْ تَرَىٰٓ إِذِ ٱلظَّٰلِمُونَ فِى غَمَرَٰتِ ٱلْمَوْتِ وَٱلْمَلَٰٓئِكَةُ بَاسِطُوٓا۟ أَيْدِيهِمْ أَخْرِجُوٓا۟ أَنفُسَكُمُ ۖ ٱلْيَوْمَ تُجْزَوْنَ عَذَابَ ٱلْهُونِ بِمَا كُنتُمْ تَقُولُونَ عَلَى ٱللَّهِ غَيْرَ ٱلْحَقِّ وَكُنتُمْ عَنْ ءَايَٰتِهِۦ تَسْتَكْبِرُونَ﴾ **الأنعام: ٩٣**

அல்லாஹ்வின் மீது பொய்க் கற்பனை செய்பவன், அல்லது வஹீயின் மூலம் தனக்கு ஒன்றுமே அறிவிக்கப்படாமலிருக்க, ““எனக்கு வஹீ வந்தது”” என்று கூறுபவன் அல்லது ““அல்லாஹ் இறக்கிவைத்த இ(வ்வேதத்)தைப் போல் நானும் இறக்கிவைப்பேன்”” என்று கூறுபவன், ஆகிய இவர்களை விடப் பெரிய அநியாயக்காரன் யார் இருக்க முடியும்? இந்த அநியாயக்காரர்கள் மரண வேதனையில் இருக்கும் போது நீங்கள் அவர்களைப் பார்த்தால், மலக்குகள் தம் கைகளை நீட்டி (இவர்களிடம்) ““உங்களுடைய உயிர்களை வெளியேற்றுங்கள் இன்றைய தினம் நீங்கள் இழிவுதரும் வேதனையைக் கூலியாகக் கொடுக்கப்படுவீர்கள். ஏனெனில், நீங்கள் உண்மையல்லாததை அல்லாஹ்வின் மீது கூறிக் கொண்டிருந்தீர்கள் இன்னும், அவனுடைய வசனங்களை (நம்பாது நிராகரித்துப்) பெருமையடித்துக் கொண்டிருந்தீர்கள்”” (என்று கூறுவதை நீர் காண்பீர்). (அல் அன்ஆம்:93)

மேலும் அல்குர்ஆன் கூறுகிறது:

﴿ٱلنَّارُ يُعْرَضُونَ عَلَيْهَا غُدُوًّا وَعَشِيًّا ۖ وَيَوْمَ تَقُومُ ٱلسَّاعَةُ أَدْخِلُوٓا۟ ءَالَ فِرْعَوْنَ أَشَدَّ ٱلْعَذَابِ﴾ **غافر: ٤٦**

அந்நரக நெருப்பு அதன் மீது காலையிலும், மாலையிலும் அவர்கள் எடுத்துக் காட்டப்படுகிறார்கள், மேலும் மறுமை நாள் நிலைபெற்றுவிடும் நாளில் பி.்.ர்அவ்னைச் சார்ந்தோரை கடினமான வேதனையில் புகுத்துங்கள் (என மலக்குகளுக்கு கூறப்படும்) (அல் மு.்.மின் :46)

ரஸுல் (ஸல்) அவர்கள் கூறினார்கள், மண்ணறையின் வேதனையிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுங்கள் என்பதாக. (ஆதாரம் முஸ்லிம் 2867)

மு.்.மின்களுக்கும், உண்மையாளர்களுக்குமே மண்ணறையில் இன்பங்கள் காத்திருக்கின்றன. இதனையே அல்குர்ஆன் வசனம் இவ்வாறு கூறுகிறது.

﴿إِنَّ ٱلَّذِينَ قَالُوا۟ رَبُّنَا ٱللَّهُ ثُمَّ ٱسْتَقَٰمُوا۟ تَتَنَزَّلُ عَلَيْهِمُ ٱلْمَلَٰٓئِكَةُ أَلَّا تَخَافُوا۟ وَلَا تَحْزَنُوا۟ وَأَبْشِرُوا۟ بِٱلْجَنَّةِ ٱلَّتِى كُنتُمْ تُوعَدُونَ﴾ **فصلت: ٣٠**

(இன்னும்) நிச்சயமாக எங்கள் இரட்சகன் அல்லாஹ் தான் என்று கூறி பின்னர், (அதன் மீது) உறுதியாக நிலைத்துமிருந்தார்களே அத்தகையோர் மீது மலக்குகள் (மரண வேளையில்) இறங்கி (செல்ல இருக்கும் மறுமையைப் பற்றி) நீங்கள் பயப்படாதீர்கள். (நீங்கள் இவ்வுலகில் விட்டுச் செல்லும் மனைவி, மக்கள், சொத்து, சுகம் யாவற்றையும் பற்றி) கவலையும் படாதீர்கள். நீங்கள் வாக்களிக்கபட்டுக் கொண்டிருந்தீர்களே அத்தகைய சுவனபதியைக் கொண்டு நன்மாராயம் பெறுங்கள் (எனக் கூறுவார்கள்). (ஹாமிம் ஸஜ்தா:30)

ரஸுல் (ஸல்) அவர்கள் கூறினார்கள், மண்ணறையில் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு ஒரு மு.்.மின் பதிலைக் கூறிவிட்டால் வானத்திலிருந்து ஓர் அழைப்பு வந்து என்னுடைய அடியான் சரியான பதிலைக் கூறிவிட்டான். எனவே சுவனத்தின் விரிப்பை அவனுக்கு அளியுங்கள். சுவனத்தின் ஆடையை அவனுக்கு

அணிவியுங்கள். மேலும் சுவர்க்கத்திற்கான ஒரு வாயிலை அவனுக்கு திறந்து கொடுங்கள் என்று கூறும். தொடர்ந்து கூறினார்கள், சுவனத்தின் ரூஹிலிருந்தும் சுவாசத்தையும் அவருக்கு கொடுக்கப்படும். பார்வை எட்டக் கூடிய அளவு அவரது மண்ணறை விசாலமாக்கப்படும். (ஆதாரம் அபூதாவுத் 4755, அஹ்மத் 18534)

மண்ணறையின் இன்பமும், துன்பமும் நடைமுறைக்கு மாற்றமானது, நடைபெறமடியாது எனக் கூறியதன் காரணத்தால் ஒரு கூட்டத்தார் வழிதவறிவிட்டனர். ஒரு புதை குழியைத் திறந்து பார்த்தால் அதிலே வைக்கப்பட்ட உடல் அவ்வாறே இருக்கவும், தோண்டப்பட்ட குழியின் அளவு சுருங்கியோ, விரிந்தோ இன்றி, ஒரு மாற்றமுமின்றியே இருக்கிறது என்றும் கூறுகின்றனர்.

**இதற்கான மறுப்பு:**

எனினும் இறைவழிகாட்டலும், நடைமுறை நிகழ்வுகளும், பகுத்தறிவும் இவ்வாறான ஒரு நிகழ்வு ஏற்படக் கூடியது சாத்தியமே என்கின்றன.

**இறைவழிகாட்டல்**: முன்னர் கூறிய ஆதாரங்கள் மண்ணறையின் இன்பத்தையும், துன்பத்தையும் உறுதிப்படுத்துகின்றன. இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள், நபிகளார் மதீனாவின் ஒரு சில அடக்கஸ்தலங்களின் பக்கம் சென்றார்கள். இருவர் மன்னறைகளில் தண்டனை அனுபவித்துக் கொணடிருக்கும் சப்தத்தை செவியுற்றார்கள் ஒரு (நீண்ட நபி மொழியில்) ஒருவர் சிறு நீர் கழித்து நன்றாக சுத்தம் செய்யாதவராகவும், அடுத்தவர் கோள் சொல்லித் திரிந்ததன் காரணமாகவுமே தண்டனையை அனுபவித்துக் கொணடிருந்தனர் என்றார் நபிகளார் (ஆதாரம்: புஹாரி 218)

**நடைமுறையில்:**

நித்திரையில் இருக்கக் கூடிய ஒருவர் தான் ஒரு பரந்து விரிந்த ஓரிடத்தில் பல இன்பங்களை அனுபவிப்பது போன்று காண்கிறார். அல்லது ஓர் நெருக்கமான இடத்தில் வேதனைபடுவது போன்று காண்கிறார். ஆனால் அவர் கண் விழித்ததும் இவற்றை தனது படுக்கையிலே அனுபவித்ததை பார்க்கிறார். உறக்கம் மரணத்திற்கு சமமே என்பர். இதனாலே அல்லாஹ் தூக்கத்தை இறப்பிற்கு ஒப்பிட்டுள்ளான்.

﴿ ٱللَّهُ يَتَوَفَّى ٱلۡأَنفُسَ حِينَ مَوۡتِهَا وَٱلَّتِي لَمۡ تَمُتۡ فِي مَنَامِهَاۖ فَيُمۡسِكُ ٱلَّتِي قَضَىٰ عَلَيۡهَا ٱلۡمَوۡتَ وَيُرۡسِلُ ٱلۡأُخۡرَىٰٓ إِلَىٰٓ أَجَلٖ مُّسَمًّىۚ ﴾ الزمر: ٤٢

உயிர்களை அவை இறக்கும் போதும் தம் நித்திரையில் இறப்பெய்யாதவற்றையும் அல்லாஹ்வே கைப்பற்றுகிறான். பின்னர் எதன் மீது மரணத்தை அவன் விதித்து விட்டானோ அதைத் (தன்னிடமே) அவன் நிறுத்திக் கொள்கின்றான். மேலும் மற்றவற்றை குறிப்பிடப்பட்ட காலம் வரை (வாழ்வதற்காக) அவன் அனுப்பி விடுகிறான், சிந்தித்துப் பார்க்கக் கூடிய சமூகத்தாருக்கு நிச்சயமாக இதில் படிப்பினைகள் இருக்கின்றன.

**பகுத்தறிவு**

சில சமயங்களில் உறங்கிக் கொணடிருப்பவர் முற்றிலும் உண்மைக்கு சார்பான கனவுகளைக் காண்பார். ஒருவர் நபி (ஸல்) அவர்களை கூறப்பட்ட அவரது பண்புகளுடன் கனவில் காண்பது போன்று. யாராயினும் அவ்வாறு நபி (ஸல்) அவர்களைக் கண்டால் அது முற்றிலும் உண்மையானதே. ஆயினும் உறங்கிக் கொணடிருப்பவர் தனது அறையில் இருந்து கொண்டு மிகவும் தொலைவில் உள்ள ஒரு நிகழ்வையே காண்கிறார். உலக வாழ்வில் இது இடம் பெற சாத்தியமிருப்பின் மறுமையில் இடம்பெற இருக்காதா என்ன?

# கழா கத்ர் (விதி) பற்றி ஈமான் கொள்ளல்

கத்ர் பற்றி ஈமான் கொள்ளல்: அல்லாஹ்வே படைப்பினங்கள் அனைத்திற்கும் அதிபதி எனவும், நன்மை, தீமை, இன்பம் துன்பம் அனைத்தும் அவனது நாட்டப்படியே நிகழ்கின்றன எனவும் ஈமான் கொள்ளலாகும். மேலும் அவனே நேர்வழியையும், வழிகேட்டையும், நல்லவற்றையும், தீயவற்றையும் உண்டு பண்ணியுள்ளான். வாழ்வு, மரணம் போன்றவற்றையும் அவனது கைவசமே உள்ளது. எனவே கத்ர் என்றால் அல்லாஹ்வின் அறிவும், ஞானமும் முந்திக் கொண்ட பிரகாரம் திட்டமிட்டவைகளாகும்.

**கத்ரை ஈமான் கொள்ளுதல் நான்கு அம்சங்களை உள்ளடக்குகிறது:**

1. சிறிய பெரிய விடயங்கள் அனைத்தையும் பொதுவாகவும் விவரமாகவும் அல்லாஹ் நன்கறிகிறான் என ஈமான் கொள்ளல். அவன் சார்ந்ததும் அவனது அடியார்கள் சார்ந்ததுமான அனைத்து விடயங்களையும் நன்கறிகிறான்.

2. அவற்றை அல்லாஹ் பாதுகாக்கப்பட்ட பலகை மீது எழுதி வைத்துள்ளான் என ஈமான் கொள்ளல் இந்த இரண்டு விடயங்களையும் அல்லாஹ் கீழ்வருமாறு கூறுகிறான்.

﴿أَلَمْ تَعْلَمْ أَنَّ ٱللَّهَ يَعْلَمُ مَا فِي ٱلسَّمَآءِ وَٱلْأَرْضِ إِنَّ ذَٰلِكَ فِي كِتَٰبٍ إِنَّ ذَٰلِكَ عَلَى ٱللَّهِ يَسِيرٌ﴾ الحج: ٧٠

(நபியே) வானத்திலும், பூமியிலும் இருப்பவற்றை நிச்சயமாக அல்லாஹ் அறிவான் என்பதை நீர் அறியவில்லையா? நிச்சயமாக இது (லவ்ஹுல் மஹ்.ஃ.பூல் எனும்) புத்தகத்தில் இருக்கின்றது. நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக்க சுலபமானதேயாகும். (அல் ஹஜ் : 70)

3. அனைத்து செயல்களும் அவனது நாட்டப்படியே நடை பெறுகின்றன என ஈமான் கொள்ளல். அவன் சார்ந்ததும் அவனது படைப்பினங்கள் சார்ந்ததுமான அனைத்தும் அவனது நாட்டப்படியே நடைபெறுகின்றன. அவன் சார்ந்த செயல்களைப் பற்றி கூறும் போது:

﴿وَرَبُّكَ يَخْلُقُ مَا يَشَآءُ وَيَخْتَارُ﴾ القصص: ٦٨

மேலும், உம்முடைய இறைவன், தான் நாடியதைப் படைக்கிறான் (தூதராகத் தான் நாடியோரைத்) தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். (அல்கஸஸ்: 68)

அவனது படைப்பினங்கள் சார்ந்த செயல்பாடுகள் பற்றி கூறும் போது:

وَلَوْ شَآءَ ٱللَّهُ لَسَلَّطَهُمْ عَلَيْكُمْ فَلَقَٰتَلُوكُمْ النساء: ٩٠

மேலும் அல்லாஹ் நாடியிருந்தால் அவர்களை உங்கள் மீது சாட்டியிருப்பான் அப்போது உங்களை எதிர்த்து அவர்கள் போர் செய்திருப்பார்கள். (அந்நிஸா : 90)

4. அனைத்துப் பொருட்களும், அவற்றின் யதார்த்தம், பண்பு, அசைவுகள் உட்பட எல்லாமே அல்லாஹ்வினால் படைக்கப்பட்டுள்ளன என நம்ப வேண்டும். இதனையே அல்குர்ஆனில் இவ்வாறு கூறுகிறான் :

﴿ٱللَّهُ خَٰلِقُ كُلِّ شَيْءٍ وَهُوَ عَلَىٰ كُلِّ شَيْءٍ وَكِيلٌ﴾ الزمر: ٦٢

அல்லாஹ்வே ஒவ்வொரு பொருளையும் படைக்கிறவன், அவனே ஒவ்வொரு பொருளின் மீதும் பொறுப்பாளனுமாவான். (அஸ்ஸுமர் : 62).

﴿وَخَلَقَ كُلَّ شَيْءٍ فَقَدَّرَهُۥ تَقْدِيرًا﴾ الفرقان: ٢

அவனே எல்லாப் பொருட்களையும் படைத்து, அவற்றை அதனதன் அளவுப் படி அமைத்தான். (அல் புர்கான் : 2)

நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் சொன்னதாக அல்லாஹ் இவ்வாறு கூறுகிறான்:

﴿وَٱللَّهُ خَلَقَكُمۡ وَمَا تَعۡمَلُونَ﴾ الصافات: ٩٦

உங்களையும், நீங்கள் செய்கின்றவற்றையும் அல்லாஹ்வே படைத்தான். (அஸ்ஸாபாத் : 96)

நாம் இதுவரை கத்ர் பற்றி கூறியதிலிருந்து ஓர் அடியானுக்கு அவனது செயல்களை நிர்ணயிக்கும் ஆற்றலோ, அல்லது அதனை செய்வதற்கான ஆற்றலோ இல்லை என்ற பொருள் கிடையாது. ஏனெனில் அல் குர்ஆனும், சுன்னாவும், நடைமுறையும் மனிதனுக்கென்று ஆற்றல், விருப்பம், நாட்டங்கள் இருப்பதனையே எடுத்துக்காட்டுகின்றன.

**இறைவழிகாட்டல்:** நாட்டம் பற்றி அல்லாஹ் கூறும் போது:

﴿فَمَن شَآءَ ٱتَّخَذَ إِلَىٰ رَبِّهِۦ مَـَٔابًا﴾ النبأ: ٣٩

எனவே எவர் நாடுகிறாரோ அவர் தம் இரட்சகனிடம் மீளும்பாதையை எடுத்துக் கொள்வாராக. (அந்நப: 39)

﴿فَأۡتُواْ حَرۡثَكُمۡ أَنَّىٰ شِئۡتُمۡ﴾ البقرة: ٢٢٣

உங்கள் விளைநிலங்களுக்கு நீங்கள் விரும்பியவாறு வாருங்கள். (அல்பகரா : 223)

ஆற்றல் சக்தி பற்றி அல்லாஹ் கூறும் போது:

﴿فَٱتَّقُواْ ٱللَّهَ مَا ٱسۡتَطَعۡتُمۡ وَٱسۡمَعُواْ وَأَطِيعُواْ﴾ التغابن: ١٦

ஆகவே இயன்ற அளவிற்கு அல்லாஹ்வை நீங்கள் பயந்து கொள்ளுங்கள், (அவனின் கட்டளைகளுக்கு) செவியும் சாயுங்கள், அவனுக்கு வழிப்படுங்கள். (அத்தகாபுன் : 16)

மேலும் இறைவன் கூறுகிறான்:

﴿لَا يُكَلِّفُ ٱللَّهُ نَفۡسًا إِلَّا وُسۡعَهَاۚ لَهَا مَا كَسَبَتۡ وَعَلَيۡهَا مَا ٱكۡتَسَبَتۡ﴾ البقرة: ٢٨٦

அல்லாஹ் எந்த ஓர் ஆத்மாவிற்கும் அதன் சக்திக்குட்பட்டதைத் தவிர சிரமம் கொடுப்பதில்லை. அது சம்பாதித்துக் கொண்ட நன்மை அதற்கே. அது சம்பாதித்த தீமையும் அதற்கே. (அல்பகரா: 286)

**நடைமுறை :**

ஒவ்வொரு செயலிலும் நாட்டமும், அதற்கான ஆற்றலும் இருப்பதை ஒவ்வொரு மனிதனும் நன்கறிகிறான். இதைக் கொண்டு ஒரு செயலைச் செய்யவோ, அல்லது செய்யாது விடவோ முடியும். அவனது நாட்டத்திற்கு உதாரணமாக அவன் நடப்பதைக் கூறலாம். அவனது நாட்டமின்றி நடைபெறுவதற்கு உதாரணமாக அவனையறியாமல் அவனது உடம்பில் ஏற்படும் நடுக்கத்தைக் கூறலாம். எனினும் ஓர் அடியானின் நாட்டமும் அதைச் செயல்படச் செய்யும் ஆற்றலும் அல்லாஹ்வின் நாட்டத்தாலும், சக்தியாலும் தான் இடம் பெறுகின்றன என்பதே உண்மை. அவனே மனித நாட்டத்தையும், ஆற்றலையும் படைத்ததுடன், அனைத்து அடியார்களையும் அவர்களது செயற்பாடுகளையும் அவனே படைத்தான். இதனையே குர்ஆன் இவ்வாறு கூறுகிறது

﴿لِمَن شَآءَ مِنكُمۡ أَن يَسۡتَقِيمَ ۝٢٨ وَمَا تَشَآءُونَ إِلَّآ أَن يَشَآءَ ٱللَّهُ رَبُّ ٱلۡعَٰلَمِينَ﴾ التكوير: ٢٨ - ٢٩

உங்களில் (நேர்வழி) நிலைத்திருக்க நாடுகிறவருக்கு (இது ஒரு அறிவுரையாகும்) இன்னும் அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ் நாடினாலன்றி, நீங்கள் (நல்லறிவு பெற) நாட மாட்டீர்கள். (அத்தக்வீர் : 28,29)

ஏனெனில் இப்பிரபஞ்சம் அனைத்தும் அல்லாஹ்வின் அதிகாரத்தின் கீழ்பட்டதாகும். அவனது அறிவும் நாட்டமும் படைப்புமின்றி எதுவொன்றுமே நடைபெறாது.

நாம் இது வரை கத்ர் பற்றி கூறியதிலிருந்து ஒருவனுக்கு கடமையாக்கப் பட்டவற்றை விடுவதற்கோ, அல்லது தடுக்கப்பட்டவற்றை செய்வதற்கோ அந்த கத்ர் ஆதாரமாக அமையமாட்டாது.இந்த எண்ணம் தவறானது என்பதை கீழ் வரக் கூடியவைகள் விளக்குகின்றன:

(1) ﴿سَيَقُولُ ٱلَّذِينَ أَشۡرَكُواْ لَوۡ شَآءَ ٱللَّهُ مَآ أَشۡرَكۡنَا وَلَآ ءَابَآؤُنَا وَلَا حَرَّمۡنَا مِن شَيۡءٖۚ كَذَٰلِكَ كَذَّبَ ٱلَّذِينَ مِن قَبۡلِهِمۡ حَتَّىٰ ذَاقُواْ بَأۡسَنَاۗ قُلۡ هَلۡ عِندَكُم مِّنۡ عِلۡمٖ فَتُخۡرِجُوهُ لَنَآۖ إِن تَتَّبِعُونَ إِلَّا ٱلظَّنَّ وَإِنۡ أَنتُمۡ إِلَّا تَخۡرُصُونَ﴾ الأنعام: ١٤٨

1. அல்லாஹ் நாடியிருந்தால் நாங்களும் எங்களுடைய மூதாதையர்களும் (அல்லாஹ்வுக்கு எதையும்) இணை வைத்திருக்க மாட்டோம். (உண்ணக்கூடிய) யாதொன்றையும் (ஆகாதென்று) விலக்கியிருக்கவும் மாட்டோம் என்று இணைவைத்துக் கொணடிருப்போர் கூறுவார்கள். இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் நம்முடைய வேதனையைச் சுவைக்கும் வரையில் இவ்வாறே (தூதர்களைப்) பொய்யாக்கிக் கொண்டிருந்தனர்.(ஆகவே நீர் உங்கள் கூற்றுக்கு) உங்களிடம் ஏதும் அறிவார்ந்த ஆதாரமுண்டா? (அவ்வாறு இருந்தால்) அதனை நமக்கு வெளிப்படுத்திக் காட்டுங்கள், (உங்களது அர்த்தமற்ற வீணான) எண்ணத்தையல்லாது வேறு எதையும் நீங்கள் பின்பற்றவில்லை. இன்னும் நீங்கள் அனுமானம் கொள்கிறவர்களேயன்றி வேறில்லை என்று கூறுவீராக. (அல்அன்ஆம் : 148)

விதியைக் கொண்டு அவர்களுக்கு ஆதாரம் காட்ட முடியுமாயின் அல்லாஹ் அவர்களை (இவ்விணைவைப்பின் மூலம்) தண்டித்திருக்கமாட்டான். மறைவான அறிவைக் காரணம் காட்டி அவர்கள் அவனை நிராகரித்தார்கள்.

(2) ﴿رُّسُلٗا مُّبَشِّرِينَ وَمُنذِرِينَ لِئَلَّا يَكُونَ لِلنَّاسِ عَلَى ٱللَّهِ حُجَّةُۢ بَعۡدَ ٱلرُّسُلِۚ وَكَانَ ٱللَّهُ عَزِيزًا حَكِيمٗا﴾ النساء: ١٦٥

2. அல்லாஹ்வின் மீது மனிதர்களுக்கு (சாதகமாக) யாதொரு ஆதாரமும் இல்லாதிருப்பதற்காக, இத்தூதர்களுக்குப் பின்னரும், தூதர்கள் பலரை (சுவர்க்கத்தைக் கொண்டு) நன்மாராயம் கூறுகின்றவர்களாகவும் (நரகத்தைக் கொண்டு) அச்சமூட்டி எச்சரிக்கின்றவர்களாகவும் (அல்லாஹ் அனுப்பி வைத்தான்) மேலும் அல்லாஹ் (யாவரையும்) மிகைத்தோனாக, தீர்க்கமான அறிவுடையோனாக இருக்கின்றான். (அந்நிஸா : 165)

விதி ஓர் ஆதாரமாக இருப்பின் அல்லாஹ் தன் தூதர்களை அனுப்பிக் கொணடே இருப்பான். ஏனெனில் அவர்களது வருகைக்குப் பின்னரும் அல்லாஹ்வின் ஆற்றலுடன் பாவங்கள் நிகழவே செய்கின்றன.

**கத்ரை ஈமான் கொள்வதால் ஏற்படும் மாற்றங்கள்:**

1. ஒரு செயல் நடைபெறும் போது அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்ளல். நடந்த அச்செயலை காரணமாகக் கருதாமல் அனைத்தும் அல்லாஹ்வின் நாட்டப்படியே நடக்கின்றன என்ற முடிவிற்கு வர முடிகிறது.

2. ஒரு நாட்டம் நிறைவேறும் போது மனிதன் தற்பெருமை கொள்ளாமல் இருக்கச் செய்கிறது. ஒருவனது நாட்டம் நிரைவேறுவது அல்லாஹ் அவன் மீது புரிந்துள்ள அருளினாலேயாகும். இதுவே அவனது வெற்றியினதும், நல்லவிடயங்களினதும்

காரணங்களாகும். எனவே தற்பெருமை கொள்வது அல்லாஹ்வின் அருளுக்கு நன்றி செய்வதை மறக்கடிக்கச் செய்யும்.

3. அல்லாஹ்வின் நாட்டப்படியே செயல்படுவதால் மனநிம்மதியும், ஆறுதலும் கிடைக்கின்றன. தனக்கு விருப்பமான ஒன்றை இழப்பதாலோ வெறுப்பான ஒன்று நிகழ்வதாலோ கலக்கமடையாதிருக்கச் செய்யும். ஏனெனில் இவை அல்லாஹ்வின் நாட்டப்படியே நிகழ்கின்றன. தனக்கு அதில் அதிகாரம் இல்லையென மன அமைதி கொள்வான் இதனையே அல்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:

﴿مَآ أَصَابَ مِن مُّصِيبَةٖ فِي ٱلۡأَرۡضِ وَلَا فِيٓ أَنفُسِكُمۡ إِلَّا فِي كِتَٰبٖ مِّن قَبۡلِ أَن نَّبۡرَأَهَآۚ إِنَّ ذَٰلِكَ عَلَى ٱللَّهِ يَسِيرٞ ٢٢ لِّكَيۡلَا تَأۡسَوۡاْ عَلَىٰ مَا فَاتَكُمۡ وَلَا تَفۡرَحُواْ بِمَآ ءَاتَىٰكُمۡۗ وَٱللَّهُ لَا يُحِبُّ كُلَّ مُخۡتَالٖ فَخُورٍ﴾ الحديد: ٢٢ - ٢٣

எந்தத் துன்பமும் அதனை நாம் சிருஷ்டிப்பதற்கு முன்னதாக (லவ்ஹுல் மஹ்ஃபூள் என்னும்) புத்தகத்தில் (பதியப்பட்டு) இருந்தே தவிர பூமியிலோ அல்லது உங்களிலோ ஏற்படுவதில்லை, நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு மிக எளிதானதாகும். உங்களுக்கு தவறிவிட்டதின் மீது நீங்கள் கவலைப்படாமல் இருப்பதற்காகவும், (அல்லாஹ்வாகிய) அவன் உங்களுக்கு கொடுப்பதைப் பற்றி நீங்கள் (வரம்பு மீறி) மகிழ்ச்சி கொள்ளாதிருப்பதற்காகவும் (இதனை உங்களுக்கு அறிவிக்கிறான்) கர்வங்கொண்டு, தற்பெருமையடிப்போர் ஒவ்வொருவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை. (அல் ஹதீத் : 22-23)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், ஒரு முஃமினது செயல்கள் அனைத்தும் அவனுக்கு நலவாக அமைவது ஆச்சரியமானதேயாகும். ஒரு நல்ல செயல் நடந்தால் அவன் நன்றியுடன் நடந்து கொள்வான். அது அவனுக்கு நல்லதாக அமையும். ஒரு கெட்ட செயல் நடந்தால் பொறுமையுடன் இருப்பான். அது அவனுக்கு நல்லதாக அமையும். இது ஒரு முஃமினுக்கன்றி வேறொருவருக்கும் கிடையாது.(ஆதாரம் முஸ்லிம் 2999.)

**கத்ர் விடயத்தில் இரு பிரிவினர் வழிதவறி விட்டனர்:**

1- **ஜபரிய்யாக்கள்:** மனிதன் அவனது செயல்களில் நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளான் அதிலே அவனுக்கு சக்தியோ சுயவிருப்பமோ இல்லை.

2- **கதரிய்யாக்கள்:** இவர்கள் கூறுகின்றனர் மனிதர்கள் ஒரு செயலைச் செய்வதிலும் அதனை நாடுவதிலும் பூரண சுதந்திரம் பெற்றுள்ளனர். அதிலே அல்லாஹ்வின் நாட்டமோ, சக்திக்கோ இடமில்லை என்கின்றனர்.

**ஜபரிய்யா என்ற முதல் பிரிவினர்க்கு மார்க்க அடிப்படையிலும், நடைமுறை அடிப்பிடையிலும் மறுப்பு:**

**இறைவழிகாட்டல்**:

அல்லாஹுதாலா மனிதனுக்கு நாட்டத்தை உறுதிப்படுத்தியுள்ளான். மேலும் செயலையும் இணைத்துள்ளான். இறைவன் கூறுகிறான்.

﴿مِنكُم مَّن يُرِيدُ ٱلدُّنۡيَا وَمِنكُم مَّن يُرِيدُ ٱلۡأٓخِرَةَ﴾ آل عمران: ١٥٢

உங்களில் இம்மையை விரும்புவோரும் உண்டு, உங்களில் மறுமையை விரும்புவோரும் உண்டு. (ஆல இம்ரான் : 152)

**நடைமுறை**:

ஒவ்வொரு மனிதனும் அவனுடைய நாட்டத்தோடு செய்யும் செயல்களையும், நாட்டமில்லாமல் நடைபெறும் நிகழ்வுகளையும் பிரித்தறிகிறான். உதாரணமாக உண்ணல், பருகல், வியாபாரம் செய்தல், வாங்குதல் போன்றவை அவனுடைய நாட்டத்தில் நடைபெறுகின்றன. காய்ச்சலால் நடுக்கம் ஏற்படல், உயர்ந்த இடத்திலிருந்து விழுதல் போன்றவை அவனது நாட்டம் விருப்பமின்றி நடைபெறுகின்றன.

**முதல்** உதாரணத்தில் எந்த நிர்ப்பந்தமும் இல்லாமல் அவனுடைய சுயவிருப்பத்தில் நிறைவேற்றுகிறான்.

**இரண்டாவது** உதாரணத்தில் அவனுடைய விருப்பமோ நாட்டமோ இல்லாமலேயே அவை நிகழ்கின்றன.

**கதரிய்யா என்ற இரண்டாவது பிரிவினருக்கு அறிவு, மார்க்கம் சார்ந்த மறுப்பு:**

**இறைவழிகாட்டல்**:

அல்லாஹ்வே அனைத்தையும் படைத்தான். அவனுடைய நாட்டபடியே அனைத்தும் நடக்கின்றது மனிதர்களுடைய செயல்கள் அல்லாஹ்வின் நாட்டப்படியே நடக்கிறது என்பதை அவனது திருமறையில் கூறியுள்ளான்.

﴿ وَلَوْ شَآءَ ٱللَّهُ مَا ٱقْتَتَلَ ٱلَّذِينَ مِنۢ بَعْدِهِم مِّنۢ بَعْدِ مَا جَآءَتْهُمُ ٱلْبَيِّنَٰتُ وَلَٰكِنِ ٱخْتَلَفُوا۟ فَمِنْهُم مَّنْ ءَامَنَ وَمِنْهُم مَّن كَفَرَ ۚ وَلَوْ شَآءَ ٱللَّهُ مَا ٱقْتَتَلُوا۟ وَلَٰكِنَّ ٱللَّهَ يَفْعَلُ مَا يُرِيدُ ﴾ البقرة: ٢٥٣

இன்னும் அல்லாஹ் நாடியிருந்தால் அவர்களுக்குப் பின்னர் உள்ளவர்கள் தங்களிடம் தெளிவான அத்தாட்சிகள் வந்த பின்னரும், சண்டையிட்டுக் கொண்டிருந்திருக்க மாட்டார்கள். ஆயினும் அவர்களோ (தங்களுக்குள்) வேறுபாடு கொண்டனர். ஆகவே அவர்களில் விசுவாசம் கொண்டவரும் உள்ளனர். அவர்களில் நிராகரித்து விட்டவரும் உள்ளனர். மேலும் அல்லாஹ் நாடினால் அவர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்திருக்க மாட்டார்கள். எனினும் அல்லாஹ்தான் நாடியதைச் செய்கிறான். (அல் பகரா : 253)

﴿ وَلَوْ شِئْنَا لَءَاتَيْنَا كُلَّ نَفْسٍ هُدَىٰهَا وَلَٰكِنْ حَقَّ ٱلْقَوْلُ مِنِّى لَأَمْلَأَنَّ جَهَنَّمَ مِنَ ٱلْجِنَّةِ وَٱلنَّاسِ أَجْمَعِينَ ﴾ السجدة: ١٣

மேலும் நாம் நாடியிருந்தால் (இவர்களில் உள்ள) ஒவ்வோர் ஆத்மாவிற்கும் அதற்குரிய நேர்வழியை நாம் கொடுத்திருப்போம். எனினும் ஜின்களாலும், மனிதர்(களில் உள்ள குற்றவாளி)கள் யாவராலும் நிச்சயமாக நான் நரகத்தை நிரப்புவேன் என்று என்னிடமிருந்து வாக்கு (முன்னரே) ஏற்பட்டுவிட்டது. (ஸஜ்தா : 13).

**அறிவு சார்ந்த மறுப்பு:**

இந்த பிரபஞ்ம் முழுவதிற்கும் இறைவனே பொறுப்பானவன். மனதனும் இப்பிரபஞ்த்திற்குள் அடங்குகிறான். எனவே அவனுக்கும் பொறுப்பாளன் அல்லாஹ்வே. எனவே பொறுப்பாளனின் அனுமதியோ நாட்டமோ இன்றி, அவனது கட்டுப்பாட்டிலுள்ளவனுக்கு எந்தவொன்றும் செய்ய முடியாது.

## இறைவனுக்கே எல்லாப் புகழும்

بسم الله الرحمن الرحيم

# ஹதீஸ்

# 1


தமிழில் : மவ்லவி இம்ரான் (கபூரி)
மீள்பரிசீலனை : எம் அஹ்மத் (அப்பாஸி)


# حديث

(اللغة التاملية)


ترجمة: محمد عمران بن جمال الدين
مراجعة : أبو عبد الرحمن أحمد بن محمد



المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة
ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH
P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065
FAX 4970126 - E-Mail:rabwah@www.com

| வாரம் | விடயம் | நேர அளவு |
|---|---|---|
| 1 | அமல்களில் மனத்தூய்மை | 45 நிமிடங்கள் |
| 2 | சிறந்த பேச்சும் முகமலர்ச்சியும் | 45 நிமிடங்கள் |
| 3 | நன்மையை அறிவிப்பவர் அதை செய்தவர் போலாவார் | 45 நிமிடங்கள் |
| 4 | உண்ணல் பருகலின் ஒழுங்கு முறை | 45 நிமிடங்கள் |
| 5 | தும்மலின் ஒழுங்கு முறை | 45 நிமிடங்கள் |
| 6 | உண்மைக்கு ஆசையூட்டுதலும், பொய்யை எச்சரித்தலும் | 45 நிமிடங்கள் |
| 7 | ஸலாம் சொல்வதின் சிறப்பும் அதை எத்தி வைத்தலும் | 45 நிமிடங்கள் |
| 8 | மாதாந்தப் பரீட்சை | 45 நிமிடங்கள் |
| 9 | மலஜலம் கழிப்பதன் ஒழுங்கு முறை | 45 நிமிடங்கள் |
| 10 | கோபத்தை விட்டும் எச்சரிக்கை | 45 நிமிடங்கள் |
| 11 | நற்குணம் | 45 நிமிடங்கள் |
| 12 | மன்னித்தலும் விட்டுக்கொடுத்தலும் | 45 நிமிடங்கள் |
| 13 | நண்பர்களின் தாத்பரியம் | 45 நிமிடங்கள் |
| 14 | நாவையும் கரத்தையும் பாதுகாத்துக் கொள்ளல் | 45 நிமிடங்கள் |
| 15 | தன் சகோதரன் விரும்புவதை தானும் விரும்புதல் | 45 நிமிடங்கள் |

# 1.அமல்களில் மனத்தூய்மை

عَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُ أَنَّ رَسُوْلَ اللَّهِ صلى الله عليه وسلم قَالَ: "الْأَعْمَالُ بِالنِّيَّةِ، ولِكُلِّ امْرِئٍ مَا نَوَى؛ فَمَنْ كَانَتْ هِجْرَتُهُ إِلَى اللهِ وَرَسُوْلِهِ؛ فَهِجْرَتُهُ إِلَى اللهِ وَرَسُوْلِهِ، وَمَنْ كَانَتْ هِجْرَتُهُ لِدُنْيَا يُصِيبُهَا، أَوِ امْرَأَةٍ يَتَزَوَّجُهَا؛ فَهِجْرَتُهُ إِلَى مَا هَاجَرَ إِلَيْهِ". (متفق عليه)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "செயல்கள் அனைத்தும் எண்ணத்தைப் பொறுத்தே அமைகின்றன. ஒவ்வொரு மனிதருக்கும் அவர் எண்ணியதுதான் கிடைக்கிறது. எனவே எவருடைய ஹிஜ்ரத் அல்லாஹ்வுடையவும் அவனுடைய தூதருடையவும் கட்டளைக்கேற்ப அமையுமோ அவரின் ஹிஜ்ரத்தை அவ்வாறே அல்லாஹ் கருதுவான். மேலும் ஒருவரின் ஹிஜ்ரத் உலகத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தால் அல்லது ஒரு பெண்ணை மணப்பதை நோக்கமாகக் கொண்டால் அவர்களின் ஹிஜ்ரத் எதை நோக்கமாகக் கொண்டுள்ளதோ அதுவாகவே அமைந்து விடுகிறது".
அறிவிப்பவர் : உமர் பின் கத்தாப் (ரலி)
(ஆதாரம் : புஹாரி 54 , முஸ்லிம் 1907)

## அறிவிப்பாளர் பற்றி

அபூ ஹப்ஸ் என்ற புனைப்பெயருடனும், அல்பாரூக் என்ற சிறப்புப் பெயருடனும் அழைக்கப்பட்ட உமர் பின் கத்தாப் (ரலி) இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் இரண்டாம் கலீபா, நுபுவ்வத்தின் பின் 6ம் ஆண்டு இஸ்லாத்தை ஏற்றார். மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்து நபிகளாருடன் அனைத்து யுத்தங்களிலும் கலந்து கொண்டார். ஹிஜ்ரி 23ம் ஆண்டு பஜ்ருத் தொழுகையில் வைத்து அபூலு.ஃ.லுஆ என்ற நெருப்பு வணங்கியினால் கொலை செய்யப்பட்டு அன்னை ஆயிஷாவின் அறையில் நபி (ஸல்) மற்றும் அபூபக்ர் (ரலி)அவர்களுடன் அடக்கம் செய்யப்பட்டார்கள். அவருடைய ஆட்சிக்காலம் 10 வருடங்களும் 6 மாதங்களுமாகும்.

## படிப்பினை

1- இஸ்லாத்தின் எல்லா செயல்களிலும் அடிப்படை அஸ்திவாரம் நிய்யத்தாகும்.
2- உண்மையான நிய்யத்துடன் செய்யப்படும் செயல்களை இறைவன் ஏற்றுக் கொள்கிறான்.
3- உலக விவகாரங்களாக இருந்தாலும் ஒரு முஸ்லிமின் எண்ணம் சரியாக அமைந்தால் அவன் கூலி வழங்கப்படுவான். செயல்கள் அனைத்தும் வணக்கமாகவே அமையும். உதாரணம், ஒரு ஆசிரியர் கற்பிப்பதில், ஒரு மாணவன் படிப்பதில், ஒரு ஊழியனின் வேலையிலும், வியாபாரி தனது வியாபாரத்திலும், இது போன்ற ஏனைய விடயங்களிலும் எண்ணம் தூய்மையானதாக அமைந்து விட்டால் வணக்கமாகவே கருதப்படுகிறது.
4- ஒரு முஸ்லிம் நல்ல காரியத்தை செய்ய நாடி அவரால் அதை செய்ய முடியாவிட்டாலும் அவருடைய எண்ணத்திற்காக கூலி வழங்கப்படும்.
5- அல்லாஹ்வுக்கு மாத்திரம் உரிய தூய எண்ணம் இம்மை, மறுமையின் வெற்றிக்கு வழி அமைக்கும்.

# 2-சிறந்த பேச்சும் முகமலர்ச்சியும்

عَنْ أَبِيْ ذَرٍّ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: قَالَ لِيْ النَّبِيُّ صلى الله عليه وسلم: لَا تَحْقِرَنَّ مِنَ الْمَعْرُوْفِ شَيْئاً، وَلَوْ أَنْ تَلْقَى أَخَاكَ بِوَجْهٍ طَلِقٍ. (رواه مسلم)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: **நன்மையான சிறு விடயமாயினும் இழிவாகக் கருதாதே, உன் சகோதரனை முகமலர்வுடன் நோக்குதலாயினும் சரியே.**
அறிவிப்பாளர்: அபூதர் (ரலி) அவர்கள்.
ஆதாரம்: முஸ்லிம் 2626.

### அறிவிப்பாளர் பற்றி :

அபூ தர் என்ற புனைப்பெயருடைய இவரின் இயற்பெயர் ஜுன்துப் பின் ஜுனாதா அல்கிபாரீ (ரலி) ஆகும். அவர்கள் ஆரம்ப காலப்பகுதியில் இஸ்லாத்தை ஏற்ற மக்காவாசி (முஹாஜிர்)களில் ஒருவராவார். இவர் இஸ்லாத்தை ஏற்ற சம்பவம் புஹாரியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. (புஹாரி : 3861, முஸ்லிம் 2474) இவர் உலகப் பற்றற்ற தோழர்களில் ஒருவர். நபி (ஸல்) அவர்கள் அபூ தர் (ரலி) அவர்களைப் பார்த்து நீங்கள் தனியாக வாழ்ந்த தனியாக மரணிப்பீர்கள் என முன்னறிவிப்புச் செய்தார்கள். அதன்படியே உஸ்மான் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் ஹிஜ்ரி 32-ல் ரப்தா என்ற இடத்தில் மரணித்தார்கள். அப்பகுதியில் யாரும் இருக்கவில்லை. அவர்களது மனைவி தனது கணவரின் ஜனாஸா வைத்துக் கொண்டு யாராவது வருவார்களா என எதிர்பார்த்துக் கொண்டிருந்த வேலை அவ்வழியாக இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் ஒரு பிரயாணத்திலிருந்து திரும்பிக்கொண்டிருந்தார்கள். இவர்களைக் கண்டதும் ஜனாஸாவுக்குரிய கடமைகளைச் செய்து அடக்கம் செய்தார்கள்.

### சாராம்சம் :

நபிமொழியில் கூறப்பட்டுள்ள 'ம.ஃரூப்' என்ற சொல் அனைத்து நற்காரியங்களையும் குறிக்கும். தனது சகோதரனைப் பார்த்து புன்முறுவல் பூப்பதை நபி (ஸல்) அவர்கள் குறைந்தபட்ச உதாரணமாகக் கூறியுள்ளார்கள். ஒரு முஸ்லிமிடம் பழிப்புத்தன்மை இல்லாதிருத்தல் மார்க்க விடயங்களில் ஒன்றாகும். ஒருவர் தனது நண்பர்களை நற்செய்தி, சந்தோஷம், புன்முறுவலுடன் நோக்குவது கடமையாகும், ஏனெனில் இவைகள் அவரது உள்ளுணர்வை அறிவிக்கும் அடையாளங்களாகும். அவ்வாறு தனது சகோதரர்களை நோக்குவது அன்பையும் மகிழ்வையும் உணர்த்துகிறது.

### படிப்பினை :

1- ஒரு சிறு விடயமாக இருப்பினும் துச்சமாகக் கருதாமை
2- நண்பர்களுடன் முகமலர்ச்சியுடனும், மிருதுவாகவும் நடந்து கொள்ளல்.
3- இஸ்லாமிய சகோதரத்துவம் வலுப்பெறத் தூண்டல்.
4- தனது சகோதரனை மன மகிழ்வுடன் நோக்கல்.

# 3-நன்மையை அறிவிப்பவர் அதை செய்தவர் போலாவார்

عَنْ أَبِيْ هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ، أَنَّ رَسُوْلَ اللهِ صلى الله عليه وسلم قَالَ : مَنْ دَعَا إِلَى هُدًى، كَانَ لَهُ مِنَ الْأَجْرِ مِثْلُ أُجُوْرِ مَنْ تَبِعَهُ، لَا يَنْقُصُ ذَلِكَ مِنْ أُجُوْرِهِمْ شَيْئاً. وَمَنْ دَعَا إِلَى ضَلَالَةٍ كَانَ عَلَيْهِ مِنَ الْإِثْمِ مِثْلُ آثَامِ مَنْ تَبِعَهُ لَا يَنْقُصُ ذَلِكَ مِنْ آثَامِهِمْ شَيْئاً. (رواه مسلم)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: **யார் நேர்வழியின் பக்கம் அழைக்கிறாரோ அவருக்கு அவரைப் பின்பற்றியவருடைய (கூலி) நன்மையும் கிடைக்கிறது. (எனினும்) அவருடைய நன்மையில் எவ்வித குறையும் ஏற்படாது. மேலும் யார் வழி கேட்டின் பால் அழைக்கிறாரோ அவருக்கு அவரை பின்பற்றியவருடைய தீமையும் கிடைக்கிறது. (எனினும்) அவருடைய தீமையில் இருந்து எவ்வித குறையும் ஏற்படாது.**
அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா (ரலி) அவர்கள்.
ஆதாரம்: முஸ்லிம் 2674.

## அறிவிப்பாளர் பற்றி :

“ராவியதுல் இஸ்லாம்” என்ற சிறப்புப்பெயர் பெற்றவர் ஆபூ ஹுரைரா அப்துர் ரஹ்மான் பின் ஸக்ர் அத்தௌஸீ அல்யமானீ (ரலி). ஏற்கனவே இஸ்லாத்தை ஏற்று “கைபர்” போர் நடைபெற்ற ஹிஜ்ரி 7ம் ஆண்டு மதீனாவுக்கு ஹிஜ்ரத் மேற்கொண்டார்கள். பின்னர் தொடர்ந்து 4 வருடங்கள் நபிகளாருடனே இருந்தார்கள். நபிகளாரைத் தொட்டும் அதிக நபிமொழிகளை மனனமிட்டு, 5374 ஹதீஸ்களை அறிவித்து, நபித்தோழர்களில் மிகக் கூடுதலான நபிமொழிகளை அறிவித்தவர் என்ற பெயருக்கு சொந்தமானார். மேலும் மதீனாவின் பிரபல சட்டக்கலை வல்லுனர்களில் ஒருவராகவும் திகழ்ந்தார். ஹிஜ்ரி 57ம் ஆண்டு மதீனாவில் மரித்து பகீஉல் கர்கதில் அடக்கம் செய்யப்பட்டார்.

## சாராம்சம் :

தன் சமூகம் நன்மை செய்வதையும், அதன் பக்கம் அழைப்பதையும் நபி (ஸல்) அவர்கள் ஆசை கொள்கிறார்கள். எவரொருவர் நேர்வழியின் பக்கம் வழிகாட்டுகிறாரோ அவர் அல்லாஹ்விடமிருந்து மகத்தான கூலியைப் பெறுகிறார். எவ்வாறெனில் அதை செய்பவருக்குக் கொடுக்கப்படும் கூலியைப் போன்ற கூலியை எவ்வித குறையுமின்றி பெறுகிறார். யார் நேர் வழியில் அழைக்கிறாரோ அவருக்கு அவரை பின்பற்றியவருடைய கூலி கிடைக்கிறது. மேலும் எவர் ஒரு பாவ காரியத்தின் பக்கம் தூண்டுகிறாரோ அல்லது ஏவுகிறாரோ, அல்லது அதற்கு உதவுகிறாரோ அச்செயலைத் தொடர்கிறவருக்கு சுமத்தப்படும் குற்றத்தைப் போன்ற குற்றம் அவர் மீதும் சுமத்தப்படும்.

## படிப்பினை :

1- நேர்வழியின் பக்கம் வழிகாட்டல், அதன் பால் தூண்டுதலின் சிறப்பும் அதனுடைய கூலியின் மகிமையும்.
2- வழிகாட்டியவருக்கு கொடுக்கப்படும் கூலியைப் போல் அதை செய்பவருக்கும் எவ்வித குறையுமின்றி கொடுக்கப்படுதல்.
3- நூதனச் செயல், வழிகேடு இவைகளின் பால் அழைத்து மக்களின் வழிகேட்டுக்கு காரணமாக இருப்பவர்களுக்கு கடுமையான எச்சரிக்கை.

# 4 - உண்ணல் பருகலின் ஒழுங்கு முறை

عَنْ عُمَرَ بْنِ أَبِيْ سَلَمَةَ قَالَ: كُنْتُ فِيْ حِجْرِ رَسُوْلِ اللهِ صلى الله عليه وسلم : وَكَانَتْ يَدِيْ تَطِيْشُ فِيْ الصَّحْفَةِ فَقَالَ لِيْ: يَا غُلَامُ سَمِّ اللهَ وَكُلْ بِيَمِيْنِكَ وَكُلْ مِمَّا يَلِيْكَ. (رواه البخاري ومسلم)

உமர் இப்னு அபீ ஸலமா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நான் பெருமானார் (ஸல்) அவர்களின் பராமரிப்பில் வளர்ந்தேன். ஒரு சமயம் எனது கை சாப்பாட்டுப் பாத்திரத்தில் சுற்றிக் கொண்டிருந்தது. அப்போது நபியவர்கள், **சிறுவனே அல்லாஹ்வின் பெயரை (பிஸ்மில்லாஹ்) சொல்வாயாக, வலக்கரத்தால் சாப்பிடுவாயாக மேலும் உன் முன்னால் உள்ளதை சாப்பிடுவாயாக** என்றார்கள்.
அறிவிப்பாளர் : உமர் இப்னு அபி ஸலமா (ரலி) அவர்கள்.
ஆதாரம் : புஹாரி 5376 முஸ்லிம் 2022.

## அறிவிப்பாளர் பற்றி

உமர் இப்னு அபீ ஸலமா நபி (ஸல்) அவர்களின் வீட்டில் வளர்ந்தவர். இவர்களின் தாயார் உம்முல் மு∴மினீன் உம்மு ஸலமா (ரலி). ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டு ஹபஷா(எத்யோபியா)வில் பிறந்தார். அலி (ரலி) அவர்கள் பஹ்ரைன் நாட்டுக்கு அதிகாரியாக இவரை நியமித்தார்கள். அப்துல் மலிக் பின் மர்வானின் ஆட்சிக்காலத்தில் மதீனாவில் ஹிஜ்ரி 83-ல் காலமானார்.

## சாராம்சம்

உணவு உட்கொள்ளும் ஒழுங்குமுறைகளை இந்நபிமொழி மூலம் சுட்டிக்காட்டுகின்றார்கள். சாப்பிடும் போது பிஸ்மில்லாஹ் சொல்வதற்கும் வலக்கரத்தால் உண்ணுவதற்கும் இந்நபிமொழியில் ஆதாரமுண்டு. இடக்கரத்தால் உண்ணல், பருகல் கூடாது, இது ஷைத்தானுடைய செயல் என்பதற்கும் இந்த நபி மொழி ஆதாரமாகும். மேலும் முஸ்லீம்கள், தீயவர்கள் மற்றும் ஷைத்தானுடைய வழிமுறைகளை விட்டும் விலகி நடக்கும் படி ஏவப்பட்டுள்ளார்கள். நாபி∴ என்பவர் கூறுகிறார், எடுத்தல், கொடுத்தல் போன்ற விடயங்கள் வலக்கரத்தாலே அமைய வேண்டும். அவ்வாறே ஒரு முஸ்லிம் தனக்கு அருகாமையில் உள்ளதையே சாப்பிட வேண்டும்.

## படிப்பினை

1- உணவருந்தும் முன் பிஸ்மில்லாஹ் சொல்லுதல்.
2- ஆரம்பத்தில் (பிஸ்மில்லாஹ்) சொல்ல மறந்தால் (பிஸ்மில்லாஹி அவ்வலுஹு வஆகிருகு) என்று வேறு நபிமொழிகளில் இடம்பெற்றுள்ளதைப் போன்று சொல்லுதல்.
3- சாப்பிட்டால் வலக்கரத்தால் சாப்பிடுதல், குடித்தால் வலக்கரத்தால் குடித்தல்.
4- உணவருந்தி, பருகி முடிந்த பின் (அல்ஹம்துலில்லாஹ்) சொல்லுதல்.
5- தனக்கு முன்னால் உள்ளதை சாப்பிடுதல். இதற்கு வேறு நபிமொழிகளில் ஆதாரமுண்டு.
6- சிறுவர்கள் தவறிடும் போது அந்த நேரத்திலேயே சுட்டிக்காட்டுவது மனதில் பதிய சிறந்த அனுகுமுறையாகும்.

# 5 - தும்மலின் ஒழுங்கு முறை

عَنْ أَبِيْ هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ عَنِ النَّبِيِّ صلى الله عليه وسلم قَالَ: إِذَا عَطَسَ أَحَدُكُمْ فَلْيَقُلْ : الْحَمْدُ لِلهِ ، وَلْيَقُلْ لَهُ أَخُوْهُ أَوْ صَاحِبُهُ يَرْحَمُكَ اللهُ ، فَإِذَا قَالَ لَهُ يَرْحَمُكَ اللهُ ، فَلْيَقُلْ : يَهْدِيْكَ اللهُ وَيُصْلِحُ بَالَكُمْ. (رواه البخاري)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், **உங்களில் ஒருவர் தும்மினால் ""அல்ஹம்துலில்லாஹ்"" என்று சொல்லட்டும். அதற்குப் பதிலாக அருகிலிருப்பவர் ""யர்ஹமுகல்லாஹ்""** (அல்லாஹ் உங்களுக்கு அருள் புரியட்டும்) **என்று சொல்லட்டும். அவர் ""யர்ஹமுகல்லாஹ்"" என்று சொன்னால் தும்மியர் ""யஹ்தீகுமுல்லாஹு வயுஸ்லிஹு பாலகும்"".**(அல்லாஹ் உங்களுக்கு நேர்வழி காட்டி, உங்கள் எண்ணங்கள் அனைத்தையும் சீராக்குவானாக) **என்று சொல்லட்டும்.**

அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா (ரலி)
ஆதாரம் : புஹாரி 6224.

## அறிவிப்பாளர் பற்றி

அறிவிப்பாளர் அபூ ஹுரைரா (ரலி) பற்றி 2ம் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

## சாராம்சம்

தும்மல் என்பது அல்லாஹ்விடமிருந்தும், கொட்டாவி என்பது ஷைத்தானிடமிருந்தும் ஏற்படுவதாக நபியவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் கூறினார்கள். தும்மலினால் அல்லாஹ் மனிதனின் உடல் நலத்திற்கு புரியும் அருள் தெரியவருகிறது. தும்மலினால் பல தீங்குகளை அல்லாஹ் நீக்குகிறான். அதற்காக அவன் அல்லாஹ்வை புகழ்ந்து நலவை நாடி பிரார்த்திக்கின்றான். பின்னர் தான் அல்லாஹ்வைப் புகழ்வதைக் கேட்டு தனக்காகப் பிரார்த்தனை புரிந்தவருக்குப் பதில் பிரார்த்தனை புரிவதும் வலியுறுத்தப்பட்டுள்ளது. மேலும் தும்மலின் மூலம் தலையில் இருக்கும் நச்சுவாயுக்களை வெளியாக்குகிறான். இது அல்லாஹ்வின் அருளாகும். இந்த நச்சுவாயுக்கள் வெளியாகாமல் இருந்தால் பல நோய்கள் ஏற்பட வாய்ப்புண்டு. உடம்பிற்கு தும்மல் ஏற்படுவது பூமிக்கு பூமி அதிர்ச்சி ஏற்படுவது போலாகும். இதனால் தான் அல்லாஹ்வைப் புகழ வேண்டுமென இஸ்லாம் சொல்கிறது.

## படிப்பினை

1- முடிந்தவரை தும்மலின் போது வேறு நபிமொழிகளில் இடம்பெற்றுள்ளதைப் போன்று சப்தத்தை குறைத்துக் கொள்ளல்.
2- தும்மலின் போது வேறு நபிமொழிகளில் இடம்பெற்றுள்ளதைப் போன்று கை அல்லது கைக்குட்டையால் வாயை மூடிக் கொள்ளல்
3- தும்மியவர் அல்ஹம்துலில்லாஹ் சொல்லல்.
4- தும்மியவர் அலஹம்துலில்லாஹ் சொன்னால் அருகிலிருப்பவர் யர்ஹமுகல்லாஹ் என்று சொல்லல்.
5- தும்மியவர் தனக்கு ""யர்ஹமகல்லாஹ்"" என்று சொன்னவருக்கு ""யஹ்தீகுமுல்லாஹ் வயுஸ்லிஹ் பாலகும்"" என்று சொல்லல்.
6- தும்மியவர் அல்ஹம்துலில்லாஹ் சொல்லா விட்டால் துஆவை ஆர்வமூட்டுதல். அது முஸ்லீம்களுக்கிடையில் அன்பையும் நல்லிணக்கத்தையும் ஏற்படுத்தும்.

# 6-உண்மைக்கு ஆர்வமூட்டுதலும், பொய்யை எச்சரித்தலும்

عَنْ عَبْدِ اللهِ بْنِ مَسْعُوْدٍ قَالَ: قَالَ رَسُوْلُ اللهِ صلى الله عليه وسلم: عَلَيْكُمْ بِالصِّدْقِ فَإِنَّ الصِّدْقَ يَهْدِيْ إِلَى الْبِرِّ. وَإِنَّ الْبِرَّ يَهْدِيْ إِلَى الْجَنَّةِ. وَمَا يَزَالُ الرَّجُلُ يَصْدُقُ وَيَتَحَرَّى الصِّدْقَ حَتَّى يُكْتَبَ عِنْدَ اللهِ صِدِّيْقاً. وَإِيَّاكُمْ وَالْكَذِبَ فَإِنَّ الْكَذِبَ يَهْدِيْ إِلَى الْفُجُوْرِ. وَإِنَّ الْفُجُوْرَ يَهْدِيْ إِلَى النَّارِ. وَمَا يَزَالُ الرَّجُلُ يَكْذِبُ وَيَتَحَرَّى الْكَذِبَ حَتَّى يُكْتَبَ عِنْدَ اللهِ كَذَّاباً.

(رواه البخاري ومسلم)

நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் : **உண்மையே பேசுங்கள். ஏனெனில் உண்மை பேசுவது நன்மையின் பக்கம் வழிகாட்டுகிறது. இன்னும் நன்மை சுவர்க்கத்திற்கு வழிகாட்டுகிறது. ஒரு மனிதன் தான் உண்மையாளன் என்று அல்லாஹ்விடத்தில் எழுதப்படும்வரை உண்மையே பேசி உண்மையையே தேடுவான். பொய் பேசுவதை விட்டும் உங்களை எச்சரிக்கை செய்கின்றேன். ஏனெனில் பொய் பேசுதல் தீமையின் பக்கம் வழிகாட்டுகிறது. தீமை நரகத்திற்கு வழிகாட்டுகிறது. ஒரு மனிதன் தான் பொய்யன் என்று அல்லாஹ்விடத்தில் எழுதப்படும் வரை பொய்யையே பேசி பொய்யையே தேடிக் கொண்டிருப்பான்.**

அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி).
ஆதாரம் : புஹாரி 6094 முஸ்லிம் 2607.

## அறிவிப்பாளர் பற்றி

அபூ அப்திர் ரஹ்மான் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ஆரம்ப காலத்தில் இஸ்லாத்தை ஏற்றவர். நபித்தோழர்களில் மிகத் திறமையாக அல்குர்ஆனை பாராயணம் செய்யக் கூடியவர். மக்காவில் முதன் முதலாக அல்குர்ஆனை சத்தமிட்டு ஓதயவர் இவரே. நபி (ஸல்) அவர்களிடமிருந்து 70 சூராக்களை மனனம் செய்தவர். நபியவர்கள் சில சந்தர்ப்பங்களில் இவரிடம் ஓதும்படி கூறிவிட்டு தாம் கேட்டுக்கொண்டிருப்பார்கள். கலீபா உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் கூபாவிற்கு மார்க்கத்தை கற்றுக்கொடுக்க அனுப்பப்பட்டார். பின்னர் உஸ்மான்(ரலி) அவர்களின் ஆட்சியில் கூபாவிற்கு கவர்னராக நியமிக்கப்பட்டார். தனது 60வது வயதில் ஹிஜ்ரி 32ல் மதீனாவில் மரணித்து பகீஉல் கர்கதில் அடக்கம் செய்யப்பட்டார்.

## சாராம்சம்

உண்மை என்பது யதார்த்தத்திற்கு நேரானது. பொய் யதார்த்தத்திற்குப் புறம்பானது. யார் தனது வார்த்தைகளால் உண்மையை தேடுகிறாரோ அவர் நற்குணமுடையவராவார். யார் பொய் பேசுதலை வழமையாக்கிக் கொள்கிறாரோ அவர் தீய குணமுடையவராவார். ஒவ்வொருவரின் நற்பண்பும், தீயபண்பும் அவரவரின் நடை முறை பயிற்றுவிப்பு ஆகியவை மூலம் தெளிவாகின்றது. உண்மை பேசாதிருந்தால் - இழிவும் கேவலமும் ஏற்பட்டு அதன் முடிவு நரகம் என்பதற்கும் இந்த நபி மொழி ஆதாரமாக உள்ளது.

## படிப்பினை

1- உண்மை பேசல் இஸ்லாம் தூண்டும் சிறந்த பண்புகளில் ஒன்றாகும்.
2- மனிதனுடைய வார்த்தை அவனது உள்ளத்திற்கு உடன்பட்டதாக இருக்க வேண்டும் என்பது இஸ்லாமிய நெறியாகும்.
3- உண்மை இவ்வுலக மறுவுலக வெற்றியின் சிறந்த சாதனமாகும்.
4- உண்மையாளன் என்று வர்ணிக்கப்பட்ட மனிதன் அல்லாஹ்விடத்திலும் மனிதர்களிடத்திலும் அன்புக்குரியவனாவான்.
5- இவ்வுலக மறுவுலக வெற்றிக்கான வழி உண்மை பேசுவதில் இருப்பதை தோழர்களுக்கு உணர்த்தல்.

6- பயிற்சிகளில் குறைபாடு செய்யும் போது, அது பற்றி ஆசிரியர் கேட்கும் கேள்விக்கு உண்மையைக் கொண்டு பதில் சொல்லல்.
7- பொய் பேசுதல் இஸ்லாம் தடுத்த தீய செயல்களில் ஒன்றாகும்.
8- பொய்யர்களுக்கு அதைவிட்டும் பாவமீட்சி பெறவும், பொய்யை விட்டுவிடவும் உபதேசித்தல்.
9- பொய் நரகத்திற்கு சேர்க்கும் வழிகளில் ஒன்றாகும்.

## 7-ஸலாம் சொல்வதின் சிறப்பும் அதை எத்தி வைத்தலும்

عَنْ عَبْدِ اللهِ بْنِ عَمْرٍو: أَنَّ رَجُلاً سَأَلَ رَسُوْلَ اللهِ صلى الله عليه وسلم: أَيُّ الْإِسْلَامِ خَيْرٌ؟ قَالَ: تُطْعِمُ الطَّعَامَ وَتَقْرَأُ السَّلَامَ عَلَى مَنْ عَرَفْتَ وَمَنْ لَمْ تَعْرِفْ. (رواه البخاري ومسلم)

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் இஸ்லாத்தில் சிறந்தது எது? எனக் கேட்டார். அதற்கு நபியவர்கள் : **பசித்திருப்பவருக்கு உணவளித்தலும், நீ அறிந்தவர் அறியாதவர் அனைவருக்கும் ஸலாம் சொல்லுதலும் என்றார்கள்.**
அறிவிப்பாளர் : அப்துல்லாஹ் இப்னு அம்ரு (ரலி).
ஆதாரம் : புஹாரி 12 முஸ்லிம் 39.

### அறிவிப்பாளர் பற்றி

இவர் குரைஷி வம்சத்தைச் சார்ந்த அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னு ஆஸ் இப்னு வாயில் அஸ்ஸஹ்மி என்பவராவார். இவர் தனது பாட்டன் க.்.ப் இப்னு லுஅய் என்பவர் மூலம் பெருமானார் (ஸல்) அவர்களின் குடும்பத்தைச் சேர்கிறார். இவர் அதிகமான ஹதீஸ்களை அறிவித்திருக்கிறார். தந்தைக்கும் இவருக்குமிடையில் 12 வருடங்களே வித்தியாசம் உள்ளது. நபியவர்களுடைய காலத்தில் ஹதீஸ்களை அவர்களின் அனுமதியுடன் எழுதிப் பாதுகாத்தவர்களில் இவரும் ஒருவர். தனது 72வது வயதில் ஹி. 65ல் ஷாமில் (ஸிரியாவி மரணித்தார்கள்.

### சாராம்சம்

சலாம் என்பது அல்லாஹ்வின் பெயர்களில் ஒன்று. அதனை முஸ்லிம்களுக்கு மத்தியில் காணிக்கையாக வைத்துள்ளான். எனினும் அஸ்ஸலாமு அலைக்கும் என்பது அல்லாஹ் உங்களுடன் இருப்பதைப் போன்று நீங்களும் அல்லாஹ்வின் பாதுகாவலில் இருக்கிறீர்கள் என்பதாகும். மேலும் அல்லாஹ் உங்களுடன் நட்புக் கொள்கிறான். மேலும் அஸ்ஸலாம் என்பதை ஸலாமா அதாவது அல்லாஹ்வின் பாதுகாவல், ஈடேற்றம் உங்களுக்கு கிடைக்கட்டும் என்றும் குறிப்பிடலாம். சலாம் சொல்வதில் மிக குறைந்தது அஸ்ஸலாமு அலைக்கும் என்பதாகும். தனிமனிதனாக இருந்தால் அவருடன் இருக்கும் மலக்குகளும் அவருடன் பங்கு கொள்கிறார்கள் ஸலாம் சொல்வதில் நிரப்பமானது வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு என்பது வரையாகும். தனிமனிதராக இருந்தால் அவர் பதில் சொல்வது கட்டாயமாகும். கூட்டமாக இருந்தால் அவர்களில் ஒருவர் சொன்னாலே போதுமானதாகும்.

### படிப்பினை

1- சலாம் சொல்லல் சுன்னத்தாகும், அதற்கு பதிலளிப்பது கடமையாகும்.
2- காலை சுபசோபனம், மாலை சுபசோபனம் இவையெல்லாம் இஸ்லாம் அங்கீகரிக்கும் வாழ்த்துக்களல்ல.
3- அறிந்தவர் அறியாதவர் அனைவருக்கும் சலாம் சொல்லல் இஸ்லாமிய கடமைகளில் ஒன்று.
4- செவிடராக அல்லது தூரத்தில் இருந்தால் வாயால் சொல்வதுடன் சைக்கினையாலும் சொல்லலாம்.

5- தொலைபேசியிலும் சலாம் சொல்லியே ஆரம்பித்தல்.
6- கூட்டம் கலையும் போது சலாம் சொல்லிக் கொள்ளல்.
7- பசித்திருப்பவருக்கு உணவளித்தல் சலாம் சொல்லல் இவைகளுக்கு ஆர்வமூட்டல்.

## 8-மலஜலம் கழிப்பதன் ஒழுங்கு முறை

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: كَانَ النَّبِيُّ صلى الله عليه وسلم: **إِذَا دَخَلَ الْخَلَاءَ قَالَ: اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَائِثِ** (رواه البخاري ومسلم)

நபி (ஸல்) அவர்கள் மலஜல கூடத்தினுள் நுழைந்தால் **""அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மினல் குபுசி, வல் கபாஇஸ்""** (இறைவா! தீய, அருவறுக்கத்தக்க செயல்களை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்) என்று கூறுவார்கள்.
அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள்.
ஆதாரம்: புஹாரி 142 முஸ்லிம் 375

### அறிவிப்பாளர் பற்றி

அனஸ் இப்னு மாலிக் (ரலி) பற்றி 3ம் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا، أَنَّ النَّبِيَّ صلى الله عليه وسلم: **كَانَ إِذَا خَرَجَ مِنَ الْخَلَاءِ قَالَ: غُفْرَانَكَ**. (رواه أبو داود والترمذي وابن ماجه)

**நபி (ஸல்) அவர்கள் மலஜல கூடத்திலிருந்து வெளியே வந்தால் ""குப்ரானக"" (இறைவா! உன்னிடம் பாவ மன்னிப்பு தேடுகிறேன்) என்பார்கள்.**
அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி) அவர்கள்.
ஆதாரம் : அபூ தாவூத் 30 திர்மிதி 7 இப்னு மாஜ.ஃ. 300.

### அறிவிப்பாளர் பற்றி

இறைத்தூதர் (ஸல்) அவர்களின் ஆருயிர்த் தோழரும், அருமை நண்பருமான அபூபக்கர் (ரலி) அவர்களின் செல்வப் புதல்வி தான் அன்னை ஆயிஷா (ரலி) ஆவார்கள். அவர்கள் 6 வயதில் இருக்கும் போது நபியவர்கள் அவர்களைத் திருமணம் செய்து 9வது வயதில் ஹிஜ்ரி 2ல் உறவு கொண்டார்கள். நபியவர்கள் மரணிக்கும் போது அன்னாருக்கு வயது 18 ஆகும். மிகச் சிறந்த அறிவாளியாகவும், அதிக ஞாபகசக்தியும் பெற்றுத் திகழ்ந்த அன்னையவர்கள், இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் மிக நீண்ட காலங்கள் வாழ்ந்திருந்ததன் காரணமாக, 2210 நபிமொழிகளையும் நமக்கு அறிவிப்புச் செய்திருக்கின்றார்கள். அன்னையவர்கள் ஹிஜ்ரி 57 அல்லது 58 ல் மதீனாவில் மரணித்து பகிஉல் கர்கதில் அடக்கம் செய்யப்பட்டார்கள். அவர்களின் வஸிய்யத்தின் பிரகாரம் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அன்னாருக்கு ஜனாஸாத் தொழுகை நடத்தினார்கள்.

### சாராம்சம்

“மலஜல கூடத்தினுள் நுழைந்தால்” என்ற வாசகத்தின் மூலம் அதற்காகத் தயாா்படுத்தப் பட்டுள்ள இடங்களில் இந்த துஆவை ஓதுவது சுன்னத்தாகும். அதே போன்று வெளியிடங்களில் மலசலங் கழிக்கும் தேவையேற்பட்டாலும் உட்காருவதற்கு முன்னா் இதனை ஓதிக்கொள்ள வேண்டும். அது அவனுக்கும் ஷைத்தனுக்குமிடையில் தடுப்பாக அமைந்துவிடும். ஏனெனில் அந்த இடங்களில் ஷைத்தானுடைய நடமாட்டம் அதிகமாகும். எங்களுடன் கூடவே இருக்கும் மலக்குமார்கள் இச்சந்தர்ப்பத்தில்

விலகிவிடுவார்கள். ஷைத்தான் மாத்திரமே எங்களுடன் வருகிறான். அதனால்தான் நபியவர்கள் அவனை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுமாறு கற்றுத்தந்துள்ளார்கள். ஹதீஸை கவனிக்கும் போது நபி (ஸல்) அவர்கள் இந்த துஆவை பகிரங்கமாக ஓதியுள்ளார்கள் என்பது தெரியவருகிறது. எனவே அதே போன்று நாமும் நுழைய முன் பகிரங்கமாக ஓதுவதே சிறந்ததாகும்.

### படிப்பினை

1- மலஜல கூடத்தினுள் நுழையும் போது "அல்லாஹும்ம இன்னி அஊது பிக மினல் குபுசி வல்கபாஇஸ்" என்ற வாசகத்தை ஓதுவது சிறந்ததாகும்.

2- வேறு நபிமொழிகளில் இடம்பெற்றுள்ளதைப் போன்று மலஜல கூடத்தில் நுழையும் போது இடது காலையும், வெளிவரும் போது வலது காலையும் முற்படுத்தல் .

3- மலஜல கூடத்திலிருந்து வெளிவரும் போது "குப்ரானக" என்று சொல்லல்.

4- மலஜலகூடம், குளியலறை ஆகிய இடங்களில் திக்ருகளை தவிர்த்துக் கொள்ளல்.

5- வெட்டவெளிகளில் மலஜலம் கழிக்கும் போது தனக்கு ஒரு மறைவை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

6- வெட்டவெளிகளில் மலஜலம் கழிக்கும் போது கிப்லாவை முன்னோக்கவோ பின்னோக்கவோ கூடாது.

## 9-கோபத்தை விட்டும் எச்சரிக்கை

عَنْ أَبِيْ هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ لِلنَّبِيِّ صلى الله عليه وسلم أَوْصِنِيْ **قَالَ: لَا تَغْضَبْ فَرَدَّدَ مِرَاراً ، قَالَ: لَا تَغْضَبْ**. (رواه البخاري)

ஒரு மனிதர் பெருமானார் (ஸல்) அவர்களிடம் வந்து எனக்கு வசியத்து (உபதேசம்) செய்யுங்கள் என்றார். அப்போது நபியவர்கள் **(கோபம் கொள்ளாதே)** என்றார்கள். அம்மனிதர் மீண்டும் மீண்டும் கேட்க நபியவர்கள் **(கோபம் கொள்ளதே)** என்றார்கள்.
அறிவிப்பாளர் : அபூ ஹுரைரா (ரலி) அவர்கள்.
ஆதாரம் : புஹாரி 6116.

### அறிவிப்பாளர் பற்றி

அறிவிப்பாளா் அபூ ஹுரைரா (ரலி) பற்றி 2ம் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

### சாராம்சம்

இந்த நபி மொழி கோபம் கொள்ளல் மற்றும் கோபம் கொள்வதற்கான காரணங்களிருந்தும் தவிர்ந்து கொள்வதற்குரிய வழிமுறைகளைக் காட்டுகிறது. கோபம் என்பது ஷைத்தான் மனதனுடைய உள்ளத்தில் போடும் நெருப்புத் துண்டு என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "கோபம் கொள்ளாதே" என்ற வார்த்தையின் மூலம் நபியவர்கள் ஈருலக நலவுகளையும் அதில் ஒன்று சேர்த்துள்ளார்கள். ஏனெனில் கோபம் அனைத்துக் கெடுதிகளினதும் திறவுகோளாக உள்ளது. கோபத்தின் போது அறிவு மங்கிவிடுகின்றது. அதனால் அவனது நடவடிக்கைகள் பைத்தியகாரனைப் போன்று அமைந்து ஈருலக நட்டத்திற்கும் வழிவகுக்கின்றது.

### படிப்பினை

1- கோபம் கொள்வதை இஸ்லாம் தடுக்கிறது. ஏனெனில் அதன் முடிவு தீங்காகும்.
2- கோபம் கொள்வதை இஸ்லாம் எச்சரிக்கிறது, ஏனெனில் அது ஷைத்தானுடைய செயலாகும்.
3- ஒரு முஸ்லிம் மற்றவர்களிடம் காரணமின்றி கோபப்படமாட்டான்.
4- இரக்கம், அன்பு உயர் குணங்களைச் சேர்ந்ததாகும்.
5- அதிகம் கோபங்கொள்பவன், அதிகம் கைசேதமடைவான்.
6- கோபம் ஏற்படும் போது தனது நிலையை மாற்றிக் கொள்ளுமாறும், வுழூச் செய்து கொள்ளுமாறும் நபியவர்கள் பணித்துள்ளார்கள்.

## 10-நற்குணம்

عَنْ عَبْدِ اللهِ بْنِ عَمْرٍو رَضِيَ اللهُ عَنْهُمَا قَالَ: لَمْ يَكُنِ النَّبِيُّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ فَاحِشاً وَلَا مُتَفَحِّشاً، وَكَانَ يَقُوْلُ: إِنَّ مِنْ خِيَارِكُمْ أَحْسَنَكُمْ أَخْلَاقاً. (رواه البخاري)

நபி (ஸல்) அவர்கள் தீய வார்த்தைகளை பேசுபவர்களாகவோ, தீய குணமுடையவராகவோ இருக்கவில்லை. மாறாக **உங்களில் நற்குணமுடையவரே உங்களில் சிறந்தவர்** என்றே கூறுவார்கள்.
அறிவிப்பாளர் : அப்துல்லா இப்னு அம்ரு (ரலி).
ஆதாரம் : புஹாரி 3559.

### அறிவிப்பாளர் பற்றி

அறிவிப்பாளர் அப்துல்லாஹ் பின் அம்ரு (ரலி) பற்றி 7ம் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

### சாராம்சம்

நபி (ஸல்) அவர்களின் நற்குணத்திற்கு இந்த ஹதீஸ் ஆதாரமாக உள்ளது, மேலும் நபி (ஸல்) அவர்கள் தீய வார்த்தைகளை பேசுபவர்களாகவோ, தீய குணமுடையவராகவோ இருக்கவில்லை மாறாக அவர்கள் சிறந்த குணமுடையவர்களாகவே இருந்தார்கள். தீய குணம் என்பது சொல், செயல், பண்புகளால் வெளிப்படும் வெறுப்புக்குரிய விடயங்களாகும். தீயதை பேசுபவன் தீய குணமுடையவன், எப்போதும் தீயதையே சொல்வான். மேலும் அவன் சில சந்தர்ப்பங்களில் தீயதை பயன்படுத்துவான். தீய குணமுடையவனை நிச்சயமாக அல்லாஹ் விரும்புவதில்லை என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

### படிப்பினை

1- இஸ்லாமிய மார்க்கத்தின் மகிமை யாதெனில் முஸ்லீம்களை உயர் பண்பாடுகளின் பக்கம் அழைக்கிறது. உதாரணமாக தீங்குகளைத் தடுத்தல், மனிதர்களை புன்முறுவலுடன் எதிர் கொள்ளல், நற்காரியங்களில் ஈடுபடல்.
2- உயர் குணங்களை கடை பிடித்தல், தீயவைகளை விட்டு விடல்
3- நற்குணம் மறுமையில் நபி (ஸல்) அவர்களிடம் நெருக்கத்தை ஏற்படுத்தும்.
4- முஸ்லிம்களை கண்ணியப்படுத்தி அவர்களுடன் அழகிய முறையில் நடந்து கொள்வதும் நற்குணத்திலுள்ளதாகும்.
5- நற்குணமுடையவர் அல்லாஹ்வின் நேசத்தையும், மனிதர்களின் நேசத்தையும் பெறுகிறார்.
6- நற்குணமுடையவரே மனிதர்களில் சிறந்தவர்.

# 11- மன்னித்தலும் விட்டுக்கொடுத்தலும்

عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا: مَا خُيِّرَ رَسُوْلُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ بَيْنَ أَمْرَيْنِ إِلاَّ أَخَذَ أَيْسَرَهُمَا مَا لَمْ يَكُنْ إِثْماً ، فَإِنْ كَانَ إِثْماً كَانَ أَبْعَدَ النَّاسِ مِنْهُ. وَمَا انْتَقَمَ رَسُوْلُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ لِنَفْسِهِ إِلاَّ أَنْ تُنْتَهَكَ حُرْمَةُ اللهِ فَيَنْتَقِمَ لِلّهِ. (رواه البخاري ومسلم)

நபி (ஸல்) அவர்களுக்கு இரண்டு விடயங்களில் தெரிவு கொடுக்கப்பட்டால் பாவமான விடயங்கள் இல்லையெனில் இலகுவானதையே தேர்ந்தெடுப்பார்கள். அது பாவமான விடயங்களாக இருந்தால், மனிதர்களில் மிகவும் தூரமானவர்களாக அவர்கள்தான் இருப்பார்கள். இன்னும் நபி (ஸல்) அவர்களின் சொந்த விடயங்களில் யாரையும் பழிவாங்க மாட்டார்கள். ஆனால் அல்லாஹ்வுடைய மகத்துவம் வீணடிக்கப்பட்டாலே தவிர, அப்போது அல்லாஹ்வுக்காக பழிவாங்குவார்கள்.
அறிவிப்பாளர் : ஆயிஷா (ரலி) அவர்கள்.
ஆதாரம் : புஹாரி 3560 முஸ்லிம் 2327.

## அறிவிப்பாளர் :

அறிவிப்பாளர் ஆஇஷா (ரலி) பற்றி 8ம் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

## சாராம்சம்

இஸ்லாத்தில் மன்னிப்பையும் இலகுவையும் இந்த ஹதீஸ் உணர்த்துகிறது. இன்னும் நபி (ஸல்) அவர்களுக்கு உலக விடயங்களில் தெரிவு கொடுக்கப்பட்டால், பாவமான விடயங்கள் இல்லையெனில் இலகுவையே தேர்ந்தெடுப்பார்கள். மேலும் நல்லதையே எப்போதும் தெரிவு செய்வார்கள். இன்னும் நபி (ஸல்) அவர்கள் அவர்களின் சொந்த விடயங்களில் யாரையும் பழிவாங்க மாட்டார்கள். உதாரணமாக ஒரு முறை ஒரு காட்டுவாசி அவர்கள் முன்னால் சப்தத்தை உயர்த்தினார்கள் அதையும் மன்னித்தார்கள். இன்னொரு முறை நபி (ஸல்) அவர்களின் கழுத்தில் துணியை போட்டு ஒருவர் நசுக்கினார். இதையும் மண்ணித்தார்கள். எனவே அல்லாஹ்வின் உரிமைகளில் அல்லாமல் மற்றவைகளை மன்னித்துள்ளார்கள் என்பது நமக்கு தெளிவாகிறது.

## படிப்பினை

1- இஸ்லாம் இலகுவான மார்க்கம், இன்னும் பாவமான விடயங்கள் அல்லாததை விட்டுக் கொடுக்கும் மார்க்கமாகும்.
2- மன்னிக்கும் தன்மையும், விட்டுக் கொடுக்கும் தன்மையும் முஸ்லீம்கள் மத்தியில் ஒற்றுமையையும், பரஸ்பரத்தையும் உண்டாக்கும்.
3- பொறுமையிலும், மன்னிப்பிலும், விட்டுக் கொடுப்பிலும் நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றுதல்.
4- மன்னிக்கும், விட்டுக் கொடுக்கும் முஸ்லிமுக்கு இறைவனிடத்தில் மகத்தான கூலி உள்ளது.
5- மன்னித்தலும், விட்டுக் கொடுத்தலும் சொந்த விடயங்களில் மாத்திரமே தவிர இறைவனின் சட்டங்களில்ல.
6- மன்னிப்பதும் விட்டுக் கொடுப்பதும் பலவீனத்தால் அல்ல, மாறாக நன்மையை நாடியே.
7- தீய விடயங்களில் வாய்மூடியிருப்பது மன்னிப்பதிலும், விட்டுக் கொடுப்பதிலும் உள்ளடங்காது.

# 12 - நண்பர்களின் தாத்பரியம்

عَنْ أَبِيْ مُوْسَى الْأَشْعَرِيِّ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُوْلُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: إِنَّمَا مَثَلُ الْجَلِيْسِ الصَّالِحِ وَالسُّوْءِ كَحَامِلِ الْمِسْكِ وَنَافِخِ الْكِيْرِ، فَحَامِلُ الْمِسْكِ إِمَّا أَنْ يُحْذِيَكَ، وَإِمَّا أَنْ تَبْتَاعَ مِنْهُ، وَإِمَّا أَنْ تَجِدَ مِنْهُ رِيْحاً طَيِّبَةً. وَنَافِخُ الْكِيْرِ إِمَّا أَنْ يَحْرِقَ ثِيَابَكَ، وَإِمَّا أَنْ تَجِدَ رِيْحاً خَبِيْثَةً. (رواه البخاري ومسلم)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : **நல்ல நண்பனுக்கும் தீய நண்பனுக்கும் உதாரணம் நறுமணம் வைத்திருப்பவனையும் கொல்லனையும் போலாகும். நறுமணம் வைத்திருப்பவனை சேர்ந்திருப்பதால் நறுமணத்தைப் பெறலாம். அல்லது நறுமணத்தை அவனிடம் வாங்கலாம். அல்லது அவன் உனக்கு நறுமணத்தைக் கொடுக்கலாம். கொல்லன் சில நேரம் உன் ஆடைகளை எரித்து விடலாம். அல்லது நீ அவனை சேர்ந்திருப்பதால் துர்வாடையை பெற்றுக் கொள்வாய்.**

அறிவிப்பாளர் : அபூ மூஸா அல்அஷ்அரி (ரலி).
ஆதாரம் : புஹாரி 2101 முஸ்லிம் 2628.

## அறிவிப்பாளர் பற்றி

அபூ மூஸா (ரலி) அவர்கள் பிரபலமான சஹாபாக்களில் ஒருவர் ஆவார். இவருடைய பெயர் அப்துல்லாஹ் பின் கைஸ் பின் ஸுலைம். உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் பஸராவிலும், உஸ்மான் (ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் கூபாவிலும் கவர்னராக இருந்ததுடன், ஸிப்பீன் போரில் அலீ (ரலி) அவர்களின் சார்பாக நடுவராகவும் இருந்தார். அழகிய குரல்வளமுள்ளவராகவும் திகழ்தார்கள் ஹிஜ்ரி 50 ல் இறையடி சேர்ந்தார்கள்.

## சாராம்சம்

ஒரு மனிதன் நல்லவனாக இருப்பதிலும் கெட்டவனாக இருப்பதிலும் அவனுடைய தோழர்கள் பெரும்பங்கு வகிக்கின்றனர். குறிப்பாக வளர்ந்து வரும் இளைஞர்கள் பெற்றோருடன் செலவிடும் காலத்தை விட நண்பர்களுடன் செலவிடும் காலமே அதிகமானது. நற்குணமுடையவர்களுடனும், ஸாலிஹீன்களுடனும் அமர்வதில் மனிதனுக்கு சந்தோஷம் ஏற்படுகிறது என்பதை இந்த நபி மொழி தெளிவு படுத்துகிறது. யாரோடு ஒரு மனிதன் சேர்கிறானோ அவன் அவனையே சார்ந்திருப்பான். இதே போல் யார் கெட்ட குணம் படைத்தவர்களோடு அமர்கிறார்களோ அவர்களிடம் கெட்ட குணங்கள் ஊடுறுவத் துவங்கி விடுகின்றது. எனவே தான் இந்த இரண்டு உதாரணங்களையும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## படிப்பினை

1- நமது குழந்தைகள் நல்லவர்களோடு அமர்தலின் பால் இஸ்லாம் காட்டும் முக்கியத்துவம்.
2- ஒருவன் தன் நண்பன் மூலமாகவே நல்லவனாகவும், தீயவனாகவும் கணிக்கப்படுகிறான்.
3- நல்ல நண்பர்களைத் தெரிவு செய்ய ஆசை வைத்தல்.
4- நல்லவர்களை சேர்ந்திருத்தல் ஏனையவர்களுக்கு உதவவும் தீமையில் இருந்து விலகவும் வழி வகுக்கும்.
5- தொழுகையற்ற, புகைத்தல் போன்ற தீய குணமுடையவர்களை நேசிப்பதை விட்டும் ஒரு முஸ்லிம் எச்சரிக்கையாக இருத்தல்.

# 13-நாவையும் கரத்தையும் பாதுகாத்துக் கொள்ளல்.

عَنْ أَبِيْ مُوْسَى الْأَشْعَرِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: قُلْتُ يَا رَسُوْلَ اللهِ أَيُّ الْإِسْلَامِ أَفْضَلُ؟ قَالَ: مَنْ سَلِمَ الْمُسْلِمُوْنَ مِنْ لِسَانِهِ وَيَدِهِ. (رواه البخاري ومسلم)

**ஒரு முறை நபியவர்களிடம் இஸ்லாத்தில் சிறந்த (அமல்) விடயம் எது எனக் கேட்டேன். தனது கரத்தையும், நாவையும் மற்ற முஸ்லிம்களுக்கு அநியாயம் செய்வதை விட்டும் பாதுகாத்துக் கொள்வதாகும் என பதிலலித்தார்கள்.**

அறிவிப்பாளர் : அபூ மூஸா அல் அஷ்அரி (ரலி) அவர்கள்.

ஆதாரம் : புஹாரி 11 முஸ்லிம் 42.

## அறிவிப்பாளர் பற்றி

அறிவிப்பாளர் அபூ மூஸா பற்றி 12ம் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

## சாராம்சம்

ஒருவன் தன் நாவை எப்படி பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பதை இந்த நபி மொழி தெளிவு படுத்துகிறது. ஏனெனில் அநியாயங்களில் இருந்து ஒரு முஸ்லிமை அவன் சகோதரனிடம் இருந்து பாதுகாப்பது மிக முக்கியமானதாகும். இன்னும் நாவை இங்கு குறிப்பாக சொன்ன காரணம் மனதில் உள்ளதை நாவு மொழியக் கூடியதாக உள்ளது. மேலும் கையை பாதுகாத்துக் கொள்ளவும் இந்த நபி மொழி கட்டளையிடுகின்றது. ஏனெனில் அதிகமான செயல்கள் கையினால்தான் ஏற்படுகிறது. மற்றவர்களுடைய உடமைகளை உரிமையில்லாமல் அபகரித்துக் கொள்வதும் இதில் அடங்கும்.

## படிப்பினை

1- சிறு விடயமாக இருப்பினும் மற்றவரின் உரிமையில் தலையிடாமல் அத்துமீறாமல் இருத்தல்.
2- தன்னுடைய அநியாயத்தைப் பற்றி முஸ்லிம்கள் அச்சமற்று இருந்தால் அவனே சிறந்த முஸ்லிம்.
3- மனிதர்களை திட்டாமல் இருத்தல்.
4- மனிதர்கள் வெறுக்கக்கூடிய விடயங்களை பேசுவது அவர்களுக்கு அநியாயமிழைப்பதாகும்.
5- நண்பர்களுக்கிடையில் பகைமை, பிரிவினை ஏற்படுத்தும் பேச்சுக்களை (அவர்களுக்கு மத்தியில்) பரத்தாமல் தவிர்ந்து கொள்ளல்.
6- நண்பர்களின், சிறு பொருட்களாயினும் அவர்களின் விருப்பமின்றி எடுக்காதிருத்தல்.

# 14 - தன் சகோதரன் விரும்புவதை தானும் விரும்புதல்

عَنْ أَنَسٍ رَضِيَ اللهُ عَنْهُ عَنِ النَّبِيِّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ: لَا يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى يُحِبَّ لِأَخِيْهِ مَا يُحِبُّ لِنَفْسِهِ (رواه البخاري)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: **தான் விரும்புவதை தனது சகோதரனுக்கு விரும்பாத வரை உங்களில் எவரும் உண்மையான மு.்.மினாக முடியாது.**
அறிவிப்பாளர் : அனஸ் (ரலி) அவர்கள்.
ஆதாரம் : புஹாரி 13 முஸ்லிம் 45.

## அறிவிப்பாளர் பற்றி

அனஸ் இப்னு மாலிக் (ரலி) பற்றி 3ம் ஹதீஸில் கூறப்பட்டுள்ளது.

## சாராம்சம்

தான் விரும்புவதை தன் சகோதரனுக்கும் விரும்ப வேண்டும் என்பதை இந்த நபி மொழி தெளிவுபடுத்துகிறது. மேலும் தன் சகோதரனுக்கு ஏற்படும் வெளிரங்கமான, உள்ரங்கமான அனைத்து செயல்களையும் தனக்கு நேர்ந்தது போல் நினைக்க வேண்டும். இன்னும் இந்த ஹதீஸ் உரிமைகளை அதற்குரியவர்களிடம் ஒப்படைப்பதையும் பணிவையும் தூண்டுகின்றது. பெருமை, பொறாமை, வஞ்சகம் ஏமாற்றம் போன்ற மோசமான செயல்களை விடாமல் இந்த உகப்பு (மஹப்பத்) ஏற்படாது.

## படிப்பினை

1- தான் விரும்புவதை தன் சகோதரனுக்கு விரும்புவதும், தான் வெறுப்பதை தன் சகோதரனுக்கு வெறுப்பதும் ஈமானின் பூரண தன்மையின் அடையாளமாகும்.
2- கோபம், பொறாமை ஈமானைக் குறைக்க காரணமாகும்.
3- ஒரு முஸ்லிம் தன் சகோதரனுக்கு நல் வழியை காண்பிப்பதும் தீமையில் இருந்து தடுப்பதும் நட்பின் அடையாளமாகும்.
4- தனக்கு மாத்திரமே எல்லாம் கிடைக்க வேண்டும் என்ற சுயநலத்தில் எச்சரிக்கையாக இருத்தல்.

# இறைவனுக்கே எல்லாப் புகழும்

بسم الله الرحمن الرحيم

# ஃபிக்ஹு

# 1


| | | |
|---|---|---|
| தமிழில் | : | மவ்லவி இம்ரான் (கபூரி) |
| மீள்பரிசீலனை | : | எம் அஹ்மத் (அப்பாஸி) |


# فقه

(اللغة التاملية)


ترجمة: محمد عمران بن جمال الدين

مراجعة : أحمد بن محمد



المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة

ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH

P.O.BOX 29465 RIYADH 11457 - TEL 4454900 - 4916065

FAX 4970126 - E-Mail:rabwah@www.com

| வாரம் | விடயம் | நேர அளவு |
|---|---|---|
| 1 | அறிவின் சிறப்பும் ஃபிக்ஹின் விளக்கமும் | 45 நிமிடங்கள் |
| 2 | இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளும் முதல் அடிப்படை கலிமாவும் | 45 நிமிடங்கள் |
| 3 | இரண்டாவது அடிப்படை தொழுகை | 45 நிமிடங்கள் |
| 4 | மூன்றாவது அடிப்படை ஸகாத் | 45 நிமிடங்கள் |
| 5 | நான்காம், ஐந்தாம் அடிப்படைகள் நோன்பும் ஹஜ்ஜும் | 45 நிமிடங்கள் |
| 6 | வுழூச் செய்யும் முறையும், அதனை முறிப்பவையும் | 45 நிமிடங்கள் |
| 7 | காலுறைகளில் மஸ்ஹுச் செய்தல் | 45 நிமிடங்கள் |
| 8 | குளிப்பும், சுத்தம் அவசியமான ஏனைய விடயங்களும் | 45 நிமிடங்கள் |
| 9 | தொழுகையின் நிபந்தனைகள் | 45 நிமிடங்கள் |
| 10 | தொழுகை முறை (முதல் ரக்அத்) | 45 நிமிடங்கள் |
| 11 | முதலாவதும் இறுதியும் அத்தஹிய்யாத்துகள் | 45 நிமிடங்கள் |
| 12 | தொழுகையின் ருகூன்களும் வாஜிபுகளும் ஸுன்னத்துக்களும் | 45 நிமிடங்கள் |
| 13 | தொழுகையை முறிப்பவையும் அதில் வெறுக்கத்தக்க செயற்பாடுகளும் | 45 நிமிடங்கள் |
| 14 | கற்ற பாடங்களை மீட்டல் | 45 நிமிடங்கள் |
| 15 | மாதாந்தப் பரீட்சை : வுழூ செய்முறையும், தொழுகையில் ஓத வேண்டிய ஆரம்ப துஆ, அத்தஹிய்யாத்து போன்ற முக்கிய பிரார்த்தனைகள் | 45 நிமிடங்கள் |

# அறிவின் சிறப்பு

﴿ يَرۡفَعِ ٱللَّهُ ٱلَّذِينَ ءَامَنُواْ مِنكُمۡ وَٱلَّذِينَ أُوتُواْ ٱلۡعِلۡمَ دَرَجَٰتٖۚ وَٱللَّهُ بِمَا تَعۡمَلُونَ خَبِيرٞ ﴾ المجادلة: ١١

உங்களிலுள்ள விசுவாசிகளுக்கும் கல்வி அறிவு கொடுக்கப்பட்டோர்க்கும் அல்லாஹ் பதவிகளை உயர்த்துவான். (அல் முஜாதலா : 11)

﴿ وَقُل رَّبِّ زِدۡنِي عِلۡمٗا ﴾ طه: ١١٤

என் இரட்சகனே! எனக்கு அறிவை அதிகப்படுத்துவாயாக என்று நீர் பிராத்தனை செய்து கூறுவீராக. (தாஹா : 114)

عَنْ أَبِيْ هُرَيْرَةَ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ: قَالَ رَسُوْلُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ : "مَنْ سَلَكَ طَرِيْقاً يَلْتَمِسُ فِيْهِ عِلْماً، سَهَّلَ اللهُ لَهُ بِهِ طَرِيْقاً إِلَى الْجَنَّةِ" (رواه مسلم)

அறிவை தேடி யார் நடந்து செல்கிறாரோ அவருக்கு அதன் மூலம் சுவர்க்கம் செல்லும் பாதையை இறைவன் இலகுவாக்குவான் என ரஸூல் (ஸல்) அவர்கள் சொன்னதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஆதாரம் : முஸ்லிம்)

# ஃபிக்ஹு என்றால் என்ன?

**ஃபிக்ஹு என்றால் அகராதியில் ஆழமான விளக்கம் என்று பொருள்**

**பரிபாசையில்** : செயல்படுத்தப்படும் மார்க்க சட்டங்களை விரிவான ஆதாரங்களைக் கொண்டு அறிவதாகும்.
மேலே சொல்லப்பட்ட விளக்கம் உள்ளடக்குவது யாதெனில் :

- அடியானுக்கும் இறைவனுக்கும் இடையில் உள்ள தொடர்பு. இது இறைவழிபாடு சார்ந்த வணக்கங்கள் எனக் குறிக்கலாம்.
- ஒரு முஸ்லிம் அவன் சார்ந்த சமுதாயத்தோடு இருக்கும் தொடர்பு. இது அன்றாட பழக்கவழக்கங்கள் எனக் குறிக்கலாம்.

எனவே, பிக்ஹு என்பது ஆத்மீக, லௌகீக அனைத்து விடயங்களையும் உள்ளடக்கிய ஒரு தெளிவான சட்டம். ஏனெனில் இஸ்லாம் மார்க்கம் உலக விடயங்களையும் மார்க்க விடயங்களையும் தெளிவு படுத்தியதாகவே வந்தது. எனினும் ஷரீஅத் சட்டங்களையும் பிக்ஹு சட்டங்களையும் பிரித்து கவனிப்பது அவசியமாகும்.
ஷரீஅத் சட்டங்கள் குர்ஆன் ஹதீஸ் மூலம் வந்த வஹியின் வசனங்களாகும். மேலும் அவை புனிதம் மிக்கவையாகும்.
ஷரீஅத்தை உரிய முறையில் விளங்குவதற்கும் அதனை நடை முறையில் கொண்டு வருவதற்கும் அறிஞர்கள் மேற் கொண்ட முயற்சியே பிக்ஹு ஆகும். ஆதலாலே இரண்டு அறிஞர்களுக்கிடையில் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன.
இங்குதான் பிக்ஹு கலையில் மார்க்க மேதைகளுக்கு மத்தியில் கருத்து வேறுபாடுகள் ஏற்படுகிறது. ஆனால் இவர்கள் மத்தியில் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள் சிறு சிறு பிரச்சனைகளில் என்பது கவனத்திற்குரியதாகும். மார்க்கத்தின் அடிப்படை அம்சங்களில் அல்ல.

## மார்க்கச் சட்டத்தின் அடிப்படை

1- அல் குர்ஆன்
2- அல் சுன்னா
3- அல் இஜ்மா

முதல் இரண்டுமே பிரதான அடிப்படை மூலாதாரங்கள்.
மேலே கூறப்பட்டுள்ள இஜ்மாவுடன் சேர்த்து கியாஸும் அல்குர்ஆன், சுன்னாவிற்கு முரண்படாமல் இருக்கும் பட்சத்தில், அவ்விரண்டின் துணையுடன் பகுதி ஆதாரங்களாகக் கொள்ளப்படும்.

## இஜ்திஹாதின் ஆரம்பம்

இஜ்திஹாத் என்பது அல்குர்ஆனிலும் சுன்னாவிலும் கூறப்படாத ஒரு பிரச்சினைக்கு அவ்விரண்டையும் அடிப்படையாக வைத்து ஆய்வு செய்வதாகும். மேலும் சில சந்தர்ப்பங்களில் அல்குர்ஆன், ஸுன்னாவிலிருந்து ஆய்வு செய்து எடுக்கும் முறை வேறுபடலாம். நபி (ஸல்) அவர்கள் காலத்தில் ஸஹாபாக்கள் தமக்கு மத்தியில் ஏற்படும் சந்தேகங்களுக்கும் பிரச்சினைகளுக்கும் நபியவர்களிடத்திலேயே கேட்டுத் தெரிந்து கொண்டார்கள். அவர்கள் உயிருடன் இருக்கும் போது, நபித்தோழர்கள் பிரயாணம் செய்து அச்சந்தர்ப்பத்தில் ஏற்படும் பிரச்சினைகளுக்கு அவர்கள் அல்குர்ஆனையும் சுன்னாவையும் அடிப்படையாக வைத்து ஆய்வு செய்து ஒரு முடிவுக்கு வருவார்கள். இதன் மூலம் நபியவர்கள் காலத்திலேயே இஜ்திஹாத் ஆரம்பித்துவிட்டது என்பது தெளிவாகின்றது. அல் குர்ஆனும் சுன்னாவும் எதுவித தீர்வும் கூறாத சில நிகழ்வுகளும் பெரும்பாலோரின் முடிவுகள் ஏற்படாத நிகழ்வுகளும் இருக்கவே செய்கின்றன. இவ்வாறான சந்தர்ப்பங்களில் சூழ்நிலையைப் பொருத்தே முடிவுகள் எடுக்கப்படவேண்டும். இதற்கு நபி (ஸல்) அவர்கள் காலத்தில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை உதாரணமாக கூறலாம். அல் ஹன்தக் யுத்தம் முடிந்ததும் ""பனூ குரைழா"" என்ற கூட்டம் வசிக்கும் இடத்தை அடையாமல் யாரும் அஸ்ர் தொழுகையை தொழ வேண்டாம் என்று நபி (ஸல்) அவர்கள் தோழர்களைப் பணித்தார்கள். இடையில் அஸ்ர் தொழுகை நேரம் வந்த சமயம் அவர்களுக்கு மத்தியில் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அஸ்ர் தொழுகையின் நேரம் போய்விடும் என்ற பயத்தில் சிலர் தொழுதார்கள். இந்த நபி மொழியை அவர்கள் விளங்கியிருப்பார்களெனின் குறித்த இடத்தை அவசரமாக அடைய வேண்டும், தாமதித்தல் கூடாது என்பதை விளங்கியிருப்பார்கள். இன்னும் சிலர் ஹதீஸை செயல்படுத்த வேண்டுமென தொடர்ந்து சென்றார்கள். அவர்களின் பிரயாணம் முடிந்து மீண்டதும் ரஸுல் (ஸல்) அவர்களுக்கு இது தெரிய வந்தது. ஆனால் இரு பிரிவினர் செய்ததையும் தவறு என நபி (ஸல்) அவர்கள் சொல்லவில்லை. அடிப்படை அம்சங்களில்லாது சிறு விடயங்களில் அல் குர்ஆனும் சுன்னாவும் மௌனம் சாதித்ததே இஜ்திஹாத் ஏற்படக் காரணமாக அமைந்தது என்று கூறினோம்.

அல்குர்ஆன், சுன்னாவை விளங்குவதில் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளும் ஸுன்னாவை (ஸஹீஹ், ஹஸன் ழஈப்) என தரம் பிரிப்பதில் உண்டான கருத்து வேறுபாடுகளுமே இஜ்திஹாதிலும் கருத்து வேறுபாடுகள் ஏற்பட காரணமாயிருந்தன.

## பிக்ஹு மத்ரசாக்கள் உருவாகுதல்

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் பிரச்சனைகளுக்கு தீரவு காண வேண்டும் என்ற முயற்சி சஹாபாக்கள் மத்தியில் இருக்கவில்லை. ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் சஹாபாக்களோடு இருந்தார்கள். பிரச்சனைகள் வரும்போது அவர்கள் தீர்ப்புச் சொன்னார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்களின் இறப்பிற்கு பின்பு சஹாபாக்கள் நவீன பிரச்சனைகளுக்கு தீர்வு காணும் விதத்தில் இஜ்திஹாத் என்ற ஒரு துறைக்கு சென்றார்கள். மேலும் சஹாபாக்கள் பல நாடுகளுக்கு பிரிந்து சென்றார்கள். ஆங்காங்கே அவர்களுக்கு முன் வைக்கப்பட்ட மார்க்கப் பிரச்சனைகளுக்கு குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் அவர்கள் முயற்சியோடு தீர்ப்புக் கொடுத்தார்கள். அவ்வாறே அவர்களது மாணவர்களும் தொடர்ந்தார்கள் இதன் அடிப்படையில்தான் பிரபல்யம் பெற்ற சில மத்ஹபுகள் உருவாகின.

1. அல் மத்ஹப் அல் ஹனபி - இமாம் அபூ ஹனீபா அன்நு.ஃ.மான் பின் சாபித் என்பவருக்குச் சேர்த்தப்படுகின்றது (பி 80 - இ 150).
2. அல் மத்ஹப் அல் மாலிகி - இமாம் மாலிக் பின் அனஸ் என்பவருக்குச் சேர்த்தப்படுகின்றது. (பி 93- இ 173)
3. அல் மத்ஹப் அஷ்ஷாபிஈ - இமாம் முஹம்மத் பின் இத்ரீஸ் அஷ்ஷாபிஈ என்பவருக்குச் சேர்த்தப்படுகின்றது. (பி 150- இ 204)

4. அல் மத்ஹப் அல் ஹன்பலி - இமாம் அஹ்மத் பின் ஹன்பல் என்பவருக்குச் சேர்த்தப்படுகின்றது. (பி 164- இ 241)

**குறிப்பு:** ஒரு மத்ஹபை கட்டாயம் பின்பற்ற வேண்டுமென இஸ்லாத்தில் கட்டாயம் கிடையாது. ஆனால் மார்க்க அறிஞர்களில் அறிவுத் தேர்ச்சி மற்றும் மார்க்கப் பற்று இவைகளைத்தான் நாம் கவனிக்க வேண்டும். மத்ஹப் என்ற அடிப்படையில் மாத்திரம் கவனிக்கக் கூடாது.

## இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகள்

**1-இஸ்லாம் என்றால் என்ன?**

வணங்க தகுதி பெற்ற ஒரே இறைவனை பணிவதும் அவனை வழிப்படுதலுமே இஸ்லாமாகும்.

**2-இஸ்லாத்தின் முக்கியமான கடமைகள் ஐந்து:**

(1) அல்லாஹ்வைத் தவிர (வணங்குவதற்கு, வழிப்படுவதற்கு, சட்டம் இயற்றுவதற்கு, கீழ்படிவதற்கு) வேறு இறைவன் இல்லை என்றும் முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் அவனுடைய அடிமையும் திருத்தூதரும் ஆவார் என்றும் சான்று பகர்தல்.
(2) தொழுகையை நிலை நிறுத்தல்.
(3) ஸக்காத் கொடுத்து வரல்.
(4) ரமழான் மாதத்தில் நோன்பு நோற்றல்.
(5) ஹஜ்ஜை நிறைவேற்றல்.

### முதலாவது பகுதி (அஷ்ஷஹாதா)

﴿ وَمَا خَلَقْتُ ٱلْجِنَّ وَٱلْإِنسَ إِلَّا لِيَعْبُدُونِ ﴾ الذاريات: ٥٦

மேலும், ஜின்களையும், மனிதர்களையும் என்னை அவர்கள் வணங்குவதற்காகவே தவிர நான் படைக்கவில்லை. (அத்தாரியாத்:56)

﴿ قُلْ إِنَّ صَلَاتِي وَنُسُكِي وَمَحْيَايَ وَمَمَاتِي لِلَّهِ رَبِّ ٱلْعَٰلَمِينَ ﴾ الأنعام: ١٦٢

நிச்சயமாக என்னுடைய தொழுகையும், அறுத்துப்பலியிடலும் (குர்பானியும்) என் வாழ்வும், என் மரணமும் அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கே உரித்தானவையாகும் என்று (நபியே) நீர் கூறுவீராக. (அல்அன்ஆம்:162)

தற்போது இபாதத் என்றால் என்னவென்று தெரிந்து கொள்வது அவசியமாகும்.
**இபாதத் என்றால், இறைவனின் விரும்பி, பொருந்தக் கூடிய மனிதனின் உள்ரங்க, வெளிரங்கமான சொல், செயல் அனைத்தும் இறைவழிபாடே!**

أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّداً رَسُوْلُ اللهِ

(அஷ்ஹது அன்லாஇலாக இல்லல்லாஹ் வஅஷ்ஹது அன்ன முஹம்தன் ரஸுலுல்லாஹ்)
**பொருள்** : வணக்கத்திற்குரிய நாயன் அல்லாஹ்வைத்தவிர வேறு யாருமில்லையென்றும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதரென்றும் நான் சான்று கூறுகிறேன்.

## இரண்டாவது பகுதி (தொழுகை)

1. தொழுகை முன்னைய நபிமார்களும் மேற்கொண்ட ஒரு வணக்கம் :
நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் பிரார்த்தனையை அல்லாஹ் குர்ஆனில் தெளிவு படுத்துகிறான் :

﴿ رَبِّ ٱجۡعَلۡنِي مُقِيمَ ٱلصَّلَوٰةِ وَمِن ذُرِّيَّتِيۚ رَبَّنَا وَتَقَبَّلۡ دُعَآءِ ﴾ إبراهيم: ٤٠

என்னுடைய இரட்சகனே! என்னையும் என் சந்ததியிலுள்ளோரையும் தொழுகையை நிறைவேற்றுபவர்களாக ஆக்கி வைப்பாயாக. எங்களுடைய இரட்சகனே! என்னுடைய பிராத்தனையை அங்கீகரித்துக் கொள்வாயாக. (இப்ராஹீம்: 40)
நபி இஸ்மாஈல் (அலை) பற்றி :

﴿ وَكَانَ يَأۡمُرُ أَهۡلَهُۥ بِٱلصَّلَوٰةِ وَٱلزَّكَوٰةِ وَكَانَ عِندَ رَبِّهِۦ مَرۡضِيّٗا ﴿٥٥﴾ ﴾ مريم: ٥٥

அவா் தமது குடும்பத்தாருக்கு தொழுகையையும் ஸகாத்தையும் ஏவுபவராக இருந்தார். தமது இறைவனால் திருப்தி கொள்ளப்பட்டவராகவும் இருந்தார். (மர்யம் : 55).

நபி மூஸா (அலை) பற்றி :

﴿ وَأَقِمِ ٱلصَّلَوٰةَ لِذِكۡرِيٓ ﴾ طه: ١٤

““என்னை நினைவு கூறுவதற்காக தொழுகையையும் நிறைவேற்றுவீராக”” (தாஹா:14).

நபி ஈஸா (அலை) பற்றி :

﴿ وَأَوۡصَٰنِي بِٱلصَّلَوٰةِ وَٱلزَّكَوٰةِ مَا دُمۡتُ حَيّٗا ﴾ مريم: ٣١

நான் ஜீவித்திருக்கும் காலமெல்லாம் தொழுகையை நிறைவேற்றுவது கொண்டும் ஸகாத்தை கொடுத்துவருவது கொண்டும் அவன் எனக்கு உபதேசம் செய்திருக்கிறான். (மர்யம்:31)

எமது நபி (ஸல்) அவர்கள் பற்றி :

﴿ ٱتۡلُ مَآ أُوحِيَ إِلَيۡكَ مِنَ ٱلۡكِتَٰبِ وَأَقِمِ ٱلصَّلَوٰةَ ﴾العنكبوت: ٤٥

இன்னும் நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் கட்டளையிடுகிறான்: நபியே குர்ஆனாகிய இவ்வேதத்திலிருந்து உமக்கு அறிவிக்கப்பட்டதை ஓதுவீராக. தொழுகையையும் (அல்லாஹ் விதியாக்கியவாறு) நிறைவேற்றுவீராக (அல்அன்கபூத்:45)

பின்பு அனைத்து மு.ஃமின்களையும் தொழுகையைக் கொண்டு ஏவினான்.

﴿ إِنَّ ٱلصَّلَوٰةَ كَانَتۡ عَلَى ٱلۡمُؤۡمِنِينَ كِتَٰبٗا مَّوۡقُوتٗا ﴾ النساء: ١٠٣

நிச்சயமாக தொழுகை விசுவாசிகளின் மீது நேரம் குறிக்கப்பட்ட கடமையாக இருக்கிறது. (அன்னிஸா : 103)

2- தொழுகையின் முக்கியத்துவம்
இறைவன் கூறுகிறான் :

﴿ إِنَّ ٱلصَّلَوٰةَ تَنۡهَىٰ عَنِ ٱلۡفَحۡشَآءِ وَٱلۡمُنكَرِۗ وَلَذِكۡرُ ٱللَّهِ أَكۡبَرُ ﴾العنكبوت: ٤٥

1.நிச்சயமாக தொழுகை மானக் கேடான செயலிலிருந்து மார்க்கத்தில் மறுக்கப்பட்டதில் இருந்தும் தடுக்கும். நிச்சயமாக (தொழுகையின் மூலம்) அல்லாஹ்வை நினைவு கூறுவது எல்லாவற்றையும் விட பெரிதாகும். (அல்அன்கபூத்:45)

﴿ وَٱلَّذِينَ هُمۡ عَلَىٰ صَلَاتِهِمۡ يُحَافِظُونَ ﴿٣٤﴾ أُوْلَٰٓئِكَ فِي جَنَّٰتٖ مُّكۡرَمُونَ ﴾ المعارج: ٣٤ - ٣٥

2.இன்னும் அவர்கள் எத்தகையோரென்றால், தங்கள் தொழுகையின் மீது அதை முழுமையாக நிறைவேற்றுவதற்குரிய முறைகளைப் பேணிப்பாதுகாத்துக் கொள்வார்கள். மேற் கூறப்பட்ட தகுதிகளுடைய அவர்கள் சுவனங்களில் மிக்க கண்ணியப்படுத்தப்படுவார்கள். (அல்மஆரிஜ் : 34-35)

3- அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள், ரஸுல் (ஸல்) அவர்களின் மிஃராஜ் பிரயாணத்தின் போது ஐம்பது நேரத் தொழுகை கடமையாக்கப்பட்டது. பின்பு ஐந்து நேரத் தொழுகை வரை குறைக்கப்பட்டது. ""பின் முஹம்மதே என்று அழைக்கப்பட்டு என்னுடைய சொல் மாற்றப்படமாட்டாது. இந்த ஐந்து நேரத் தொழுகை ஐம்பது நேரப்பலனை அடையும்"" என்று கூறப்பட்டது.(புஹாரி முஸ்லிம்)

4.நபி (ஸல்) அவர்கள் சொல்ல நான் கேட்டேன் என்று அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள், ""உங்களில் ஒருவருடைய வீட்டு வாசலுடன் ஒரு நதி ஓடுவதாக வைத்துக்கொள்ளுங்கள். அதில் அவர் ஒரு நாளைக்கு ஐந்து நேரம் குளிக்கின்றார். அவர் உடம்பில் அழுக்குகள் ஏதும் எஞ்சியிருக்குமா? என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர் உடம்பில் எந்த அழுக்கும் இருக்காது என சஹாபாக்கள் பதிலளித்தார்கள். பின்பு நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள், இதே போன்றுதான் ஐந்து நேரத் தொழுகை. இதைக் கொண்டு அல்லாஹ் பாவங்களை போக்குகிறான்"". (புஹாரி முஸ்லிம்)

5-நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள், ""மறுமை நாளில் ஓர் அடியானிடம் முதன் முதலாக கேட்கப்படுவது தொழுகையைப் பற்றியாகும். எனவே தொழுகையை அவன் சிறப்பாக நிறைவேற்றியிருந்தால் அவனுடைய எல்லா அமல்களும் சிறப்பாக ஆகிவிடும். இன்னும் அவன் தொழுகையை சிறப்பாக நிறைவேற்றாமல் இருந்திருந்தால் அவனுடைய எல்லா அமல்களுமே பாழாகிவிடும்"".(அத்தபரானி)

6-நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக புரைதா (ரலி) அறிவிக்கிறார்கள். ""எங்களுக்கும் காபீர்களுக்கும் மத்தியில் உள்ள வித்தியாசம் தொழுகையாகும். யார் அதை விடுகிறாரோ அவர் இறைவனை நிராகரித்து விட்டார்"". (அஹ்மத்)

## மூன்றாவது பகுதி ஸக்காத் கொடுத்தல்

﴿ وَأَقِيمُواْ ٱلصَّلَوٰةَ وَءَاتُواْ ٱلزَّكَوٰةَ وَأَطِيعُواْ ٱلرَّسُولَ لَعَلَّكُمْ تُرْحَمُونَ ﴾ النور: ٥٦

இன்னும் (விசுவாசிகளே) தொழுகையை (முறையாக) நிறைவேற்றுங்கள் ஸகாத்தையும் கொடுங்கள். மேலும் அல்லாஹ்வின் தூதருக்கும் கட்டுப்படுங்கள்.(அவற்றின் மூலம்) நீங்கள் அருள் செய்யப்படுவீர்கள். (அந்நூர் : 56)

### 1- ஸகாத்தின் விளக்கம்

ஸகாத் என்றால் கட்டாயமான ஒரு நன்கொடையாகும். அது குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட பொருட்களில் இருந்து கொடுக்கப்படவேண்டும்.

### 2- ஸகாத்தின் பலன்கள்

1-இறைவனை வழிப்படுதல்.
2-ஏழை, எளியோருக்கு உதவி செய்தல்.
3-மனிதனை உலோபித்தனத்தில் இருந்து தூய்மைப் படுத்தலும், அவனுக்கு நன்கொடை பற்றி கற்றுக் கொடுப்பதும் ஸக்காத்தின் பலன்களாகும்.

### 3- ஸகாத் விதியாகும் பொருட்கள்

1-தங்கம், வெள்ளி (நாணயம்)
2-வியாபாரப் பொருட்கள்.
3-கால் நடைகள் (ஆடு, மாடு, ஒட்டகம்).

4-கனிப் பொருட்கள் (தானியங்கள், பழவகைகள்).

### 4- ஸகாத் பெறத் தகுதியுடையோர்.

ஸகாத் பெறத் தகுதியுடையோரைப் பின்வரும் வசனத்தில் இறைவன் குறிப்பிடுகிறான்:

﴿ إِنَّمَا ٱلصَّدَقَٰتُ لِلْفُقَرَآءِ وَٱلْمَسَٰكِينِ وَٱلْعَٰمِلِينَ عَلَيْهَا وَٱلْمُؤَلَّفَةِ قُلُوبُهُمْ وَفِى ٱلرِّقَابِ وَٱلْغَٰرِمِينَ وَفِى سَبِيلِ ٱللَّهِ وَٱبْنِ ٱلسَّبِيلِ ۖ فَرِيضَةً مِّنَ ٱللَّهِ ۗ وَٱللَّهُ عَلِيمٌ حَكِيمٌ ﴾ التوبة: ٦٠

தர்மங்களெல்லாம் வறியவர்களுக்கும், ஏழைகளுக்கும், அதற்காக (வசூல் செய்வது, கணக்கிடுவது போன்ற வேலைகளில்) உழைப்பவர்களுக்கும், (புதிதாக இஸ்லாத்தை தழுவியோரில்) எவர்களின் இதயங்கள் அன்பு செலுத்தப்படவேண்டுமோ அத்தகையோருக்கும், இன்னும் (அடிமைகளின்) பிடரிகளை விடுதலை செய்வதற்கும், கடனில் மூழ்கியவர்களுக்கும், அல்லாஹ்வுடைய பாதையில் செலவழிப்பதிலும், வழிப்போக்கருக்கும் உரித்தானதாகும். இது அல்லாஹ் ஏற்படுத்திய கடமையாகும். மேலும் அல்லாஹ் நன்கறிந்தவன், தீர்க்கமான அறிவுடையவன்.(அத்தவ்பா : 60)

## நான்காவது பகுதி (ரமழான் மாத நோன்பு)

### 1-நோன்பின் ஆதாரம் :

இறைவன் கூறுகிறான் :

﴿ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ كُتِبَ عَلَيْكُمُ ٱلصِّيَامُ كَمَا كُتِبَ عَلَى ٱلَّذِينَ مِن قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ ﴾ البقرة: ١٨٣

விசுவாசம் கொண்டோரே! உங்களுக்கு முன்னிருந்தவர்கள் மீது கடமையாக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் நோன்பு நோற்பது கடமையாக்கப்பட்டிருக்கிறது. அதனால் நீங்கள் (உளச்சுத்தம் பெற்று) பயபக்தியுடையவர்களாகலாம். (அல்பகறா : 183)

### 2-நோன்பின் பொருள் (விளக்கம்)

பஜ்ர் தொடக்கம் சூரியன் மறையும் வரை நோன்பை முறிக்கக்கூடிய அனைத்து காரியங்களை விட்டும், மேலும் உண்ணல், பருகலை தடுத்து இறைவனை வணங்குவதே நோன்பாகும்.

### 3-நோன்பின் சிறப்புகள்

அல்லாஹ் சொன்னதாக ரஸுல்லுல்லாஹ்வை தொட்டும் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள், ""ஆதமுடைய மகனின் எல்லாச் செயல்களும் அவனுக்குரியதே நோன்பைத் தவிர, நோன்பு எனக்குரியது அதன் கூலியை நானே கொடுப்பேன். இன்னும் நோன்பு ஒரு கேடயமாகும். மேலும் உங்களில் நோன்பாளியாக உள்ளவர் அடுத்தவருடன் தர்க்கம் புரியவோ திட்டவோ வேண்டாம், யாராவது அவரைத் திட்டினால் அல்லது சண்டை பிடித்தால் நான் நோன்பாளி என்று சொல்லட்டும். முஹம்மதின் உயிர் யார் கையில் உள்ளதோ அவன் மீது ஆணையாக, நோன்பாளியின் வாயின் வாடை, கஸ்தூரி வாடையை விட நறுமணமிக்கதாகும். நோன்பாளிக்கு இரு சந்தோஷங்கள் உள்ளன. ஒன்று அவன் நோன்பு திறக்கும் போது, மற்றது நோன்பு மூலம் இறைவனை சந்திக்கும் போது. (புஹாரி, முஸ்லிம்)

### 4-நோன்பின் பலன்கள்

1-இறைவனை வழிப்படுதல்.
2-தக்வா (இறையச்சம்) ஏற்பட ஒரு பயிற்சியாக அமைதல். இறைவன் ஏவியவைகளை ஏற்றும் தடுத்தவைகளை விலக்கி வாழவும் ஒரு பயிற்ச்சியாக நோன்பு அமைகிறது.
3-பொறுமை, தூய எண்ணம் போன்ற நல்ல பண்புகளையும் இந்த நோன்பு கற்பிக்கிறது.

**5-நோன்பை முறிக்கும் காரியங்கள்**

1- உண்ணல், பருகல், புகைத்தல். (மறதியாக ஒருவன் செய்தால் நோன்பு முறியாது)
2- உணவுக்குப் பதிலாக ஊசிகள் மூலம் ஏற்றப்படும் மருந்துகள். (ஸேலேன் போன்றது).
3- வாந்தி எடுத்தல். வேண்டுமென்றே வாந்தி எடுத்தால் நோன்பு முறிந்துவிடும். சுயவிருப்பமின்றி வாந்தி வந்தால் நோன்பு முறியாது.
4- இரத்தத்தை அதிகமாக வெளிப்படுத்தல்.(உடம்பிலிருந்து நரம்பு வழியாக இரத்தத்தை வெளிப்படுத்துதல் அல்லது இரத்த தானம் செய்வதற்காக இரத்தத்தை வெளிப்படுத்துதல். இரத்தப்பரிசேதனைக்காக எடுக்கும் குறைவான இரத்தத்தால் நோன்பு முறியாது.)
5- மாதவிடாய், பிரசவ இரத்தம் வெளிப்படுதல்.
6- இந்திரியத்தை ஒருவன் தானாக வெளிப்படுத்துதல்.
7- மனைவியோடு உடலுறவு கொள்ளல்.

**6-நோன்புப் பெருநாள் தர்மம்**

1-ஒரு ஸாஉ கொடுக்கப்பட வேண்டும். அதாவது கோதுமை, புர்ரு பேரித்தம் பழம். தான் வசிக்கும் நாட்டில் பொதுவாக உட்கொள்ளப்படும் உணவிலிருந்து இதனை வழங்க வேண்டும். ஸாஉ என்பது கிராம் கணக்கில் (மூன்று கிலோ)வைக் குறிக்கும்.
2-ஒவ்வொரு முஸ்லிமும் ஏழைகளுக்காக கொடுக்க வேண்டும்.
3-பெருநாளைக்கு ஒரு நாள் அல்லது இரண்டு நாளைக்கு முன் கொடுக்கலாம். பெருநாள் தொழுகைக்கு முன் கொடுத்து விட வேண்டும்.

## ஐந்தாவது பகுதி ஹஜ்ஜை நிறைவேற்றல்.

**1-ஹஜ்ஜின் ஆதாரம் :**

﴿ وَلِلَّهِ عَلَى ٱلنَّاسِ حِجُّ ٱلْبَيْتِ مَنِ ٱسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلًا ۚ وَمَن كَفَرَ فَإِنَّ ٱللَّهَ غَنِىٌّ عَنِ ٱلْعَٰلَمِينَ ﴾ آل عمران: ٩٧

எவர்கள் அங்கு யாத்திரை செல்லச் சக்தியுடையவர்களாக இருக்கிறார்களோ, அத்தகைய மனிதர்கள் மீது அல்லாஹ்வுக்காக அங்கு சென்று அவ்வீட்டை ஹஜ்ஜு செய்வது கடமையாகும். எவரேனும் இதை நிராகரித்தால் அப்போது அதனால் அல்லாஹ்வுக்கு ஒன்றும் குறைந்து விடுவதில்லை ஏனென்றால் நிச்சயமாக அல்லாஹ் அகிலத்தார் அனைவரை விட்டும் தேவையற்றவன். (ஆல இம்ரான்:97)

**2- ஹஜ்ஜின் நோக்கம்**

நபி (ஸல்) அவர்கள் ஒரு ஹதீஸில் சொன்னார்கள்: நிச்சயமாக கல் எறிதல், ஸபா மர்வா இடையில் ஸயி செய்வதெல்லாம் இறைவனை ஞாபகப்படுத்துவதற்கே. (அறிவிப்பவர் : ஆஇஷா (ரலி), ஆதாரம் : அபூ தாவூத், திர்மிதி) எனவே ஹஜ்ஜின் உண்மையான நோக்கம் இறைவனை நினைவு கூறல் என்பது புலனாகிறது.

**3-ஹஜ்ஜின் சிறப்பு**

1-நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். ""யார் பெண்களிடத்தில் உறவாடாமலும், பாவம் செய்யாமலும் இந்த வீட்டை ஹஜ் செய்கிறாரோ அவர் (பாவம் அழிக்கப்பட்டு) அன்று பிறந்த பாலகன் போல் திரும்புவார்"". (புஹாரி, முஸ்லிம்)

2-மேலும் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் நபியவர்களைத் தொட்டும் அறிவிக்கிறார்கள், ""இரண்டு உம்ராவுக்கு இடைப்பட்ட காலங்கள் சிறிய பாவங்களுக்கு குற்றப்பரிகாரமாகும். இன்னும் (எத்தகைய தவறும் ஏற்படாத) சிறந்த ஹஜ்ஜிக்கு சுவர்க்கத்தைத் தவிர வேறு கூலி கிடையாது"". (புஹாரி, முஸ்லிம்)

**4-ஹஜ்ஜின் பலன்கள்**

1-இறைவனை வழிப்படுதல்
2-இஸ்லாமிய ஒருமைப்பாட்டை உலகத்திற்கு எடுத்துக்காட்டல்
3-விசாரணை (இறுதி) நாளை நினைவு படுத்தல்

# சுத்தம்

சுத்தம் இரண்டு வகைப்படும் (1) அல் ம.்.னவிய்யா (உள்ரங்கமானது). (2) அல் ஹிஸ்ஸிய்யா (ஐம்புலன்களுக்குத் தெளிவானது).
அல் ம.்.னவிய்யா என்றால் இறை நிராகரிப்பு, கோபம், நயவஞ்சகம் போன்ற கெட்ட செயல்களில் இருந்து உள்ளம் சுத்தமடைதல் என்று பொருள்படும்
இரண்டாவது உடல் சுத்தத்தை போக்கக் கூடியவற்றிலிருந்து (சிறுநீர், உடலுறவு, மலம் போன்றவற்றிலிருந்து) சுத்தம் பெறுதலை குறிக்கும்.

## அல்வுழு

### 1-வுழூவின் ஆதாரம்

﴿ يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓاْ إِذَا قُمۡتُمۡ إِلَى ٱلصَّلَوٰةِ فَٱغۡسِلُواْ وُجُوهَكُمۡ وَأَيۡدِيَكُمۡ إِلَى ٱلۡمَرَافِقِ وَٱمۡسَحُواْ بِرُءُوسِكُمۡ وَأَرۡجُلَكُمۡ إِلَى ٱلۡكَعۡبَيۡنِ ﴾المائدة: ٦

விசுவாசங்கொண்டோரே! நீங்கள் தொழுகைக்குத் தயாரானால் (அதற்கு முன்னதாக) உங்கள் முகங்களையும் முழங்கைகள் வரையில் உங்கள் இரு கைகளையும் கழுவிக் கொள்ளுங்கள். (நீரைத் தொட்டு) உங்கள் தலைகளையும் மஸ்ஹு செய்து கொள்ளுங்கள். கணுக்கால் வரையில் உங்கள் இரு பாதங்களையும் (கழுவிக் கொள்ளுங்கள்.) (அல் மாஇதா:6)

### 2-வுழூவின் சிறப்பு

1-நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள், ""முஸ்லிமான ஓர் அடியான் அல்லது ஒரு மு.்.மின் வுழு செய்து முகத்தை கழுவினால், அவன் பார்வையால் செய்த பாவங்கள் அனைத்தும் தண்ணீருடன் போய்விடுகிறது. அல்லது இறுதியாக விழும் தண்ணீர் துளியுடன் போய்விடும். இன்னும் அவன் இரு கைகளைக் கழுவினால் கரங்களால் செய்த பாவங்களெல்லாம் தண்ணீருடன் போய்விடுகின்றன. அல்லது இறுதியாக விழும் தண்ணீர் துளியுடன் போய்விடுகிறது. மேலும் இரு பாதங்களைக் கழுவினால் பாதங்களினால் செய்த பாவங்கள் அனைத்தும் தண்ணீருடன் போய்விடுகிறது. அல்லது இறுதியாக விழும் தண்ணீர் துளியுடன் போய்விடுகிறது. பாவத்திலிருந்து சுத்தமடையும் வரை அவனுடைய அனைத்து பாவங்களும் போய்விடுகின்றன"".(அறிவிப்பவர் அபூ ஹுரைரா (ரலி). ஆதாரம் : முஸ்லிம்)

2-தொழுகையின் திறவுகோல் சுத்தம் என நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.
அறிவிப்பாளர்: அலி இப்னு அபி தாலிப் (ரலி). ஆதாரம் : அபூ தாவூத், திர்மிதி, இப்னு மாஜ.்..

### 3-வுழூவின் நிபந்தனைகள்

1-நிய்யத் : வுழூ செய்வதாக மனதில் நினைக்க வேண்டும். இதை நாவால் மொழிய வேண்டிய அவசியமில்லை.
2-சுத்தமான தண்ணீரை உபயோகித்தல் (மழை நீர், கடல் நீர், கிணற்று நீர்) அல்லது நஜீஸ் கலந்ததால் நிறமோ, சுவையோ அல்லது வாசமோ மாறாத தண்ணீர். (உதாரணமாக ஓடக் கூடிய தண்ணீர்)
3-வுழூவின் உறுப்புக்குள் தண்ணீர் படாமல் தடுக்கும் அனைத்தையும் நீக்குதல் வேண்டும். (உதாரணமாக, கனமான பெயின்ட், இறுக்கமாக கட்டியிருக்கும் கைக் கடிகாரம்)

## 4-வுழூ செய்யும் முறை

**1-வுழூவின் பர்ழுகள்**

1-முகத்தை பூரணமாக கழுவுதல் (அதனுடன் வாய் கொப்பளித்து நாசிக்கும் தண்ணீர் செலுத்த வேண்டும்).
2-முழங்கை வரை இரு கைகளையும் கழுவுதல்.
3-தலையையும், இரு காதுகளையும் தண்ணீரைத் தொட்டு ஒரு முறை தடவுதல்.
4-கணுக்கால் வரை இரண்டு கால்களையும் கழுவுதல்.
5-தொடச்சியாகவும் இடைவெளி இல்லாமலும் செய்தல்.

**2-வுழூவின் சுன்னத்துகள்**

1-பிஸ்மில்லா சொல்லுதல்.
2-கரங்களை மூன்று முறை கழுவுதலும், விரல்களை குடைந்து கழுவுதலும்
3-மூன்று முறை வாய் கொப்பளிப்பதும் நாசிக்குத் தண்ணீர் செலுத்தி கழுவுதலும்.
4-மூன்று முறை முகத்தைக் கழுவுதல்.
5-தாடியை குடைந்து கழுவுதல்
6-மணிக்கட்டு வரை வலது கையையும் பின்பு இடது கையையும் மூன்று முறை கழுவுதல்
7-தலையை முன் புறத்திலிருந்து பின் புறம் வரை ஒரு தடவை மஸ்ஹு செய்தல்.
8-கணுக்கால் வரை வலது காலையும் பின்னர் இடது காலையும் மூன்று முறை கழுவுதல்.
9-எல்லா செயல்களையும் வலதால் ஆரம்பித்தல்
11-துஆ ஓதல்.

أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ، وَأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُوْلُهُ.

அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹுவஹ்தஹு லா ஷரீகலஹு வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸுலுஹு. (ஆதாரம் : முஸ்லிம்).

## 5-வுழூவை முறிக்கும் காரியங்கள்_(சிறு தொடக்கு)

1-மலம் ஜலம் கழித்தல் அல்லது பின் துவாரத்திலிருந்து காற்று வெளியாகுதல்.
2-ஆழமான தூக்கம் அல்லது புத்தி நீங்குதல்.
3-திரை இல்லாமல் தன் அபத்தை இச்சையுடன் தொடுதல்.
4-ஒட்டக இறைச்சி சாப்பிடுதல்.

# கால் உறைகள் மீது மஸ்ஹு செய்தல்

முகீரா இப்னு ஷு.:.பா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நபி (ஸல்) அவர்கள் வுழூச் செய்யும் போது நானும் இருந்தேன். அவர்களுடைய கால் உறைகளை நீக்க முற்பட்ட போது ““இரண்டையும் விட்டுவிடுங்கள் அவைகளை சுத்தமாகவே அணிந்துள்ளேன்”” என்று சொல்லி விட்டு இரு கால் உறைகளின் மீதும் மஸ்ஹு செய்தார்கள். (ஆதாரம்: புஹாரி முஸ்லிம்)

## மஸ்ஹுடைய நிபந்தனைகள்

1-அணியும் போது (வுழூவுடன்) சுத்தமாக இருத்தல்.
2-அழுக்குகள் இல்லாதிருத்தல்.
3-குறிப்பிட்ட நேரத்தை தாண்டாமல் இருத்தல்
ஊரில் தங்கிருப்பவர் ஒரு நாள் ஒரு இரவு (அதாவது 24 மணித்தியாலங்கள்.)
பிரயாணி மூன்று இரவுகளுடன் மூன்று நாட்கள். (72 மணித்தியாலம்.)
குறிப்பு: (காலுறைகளை அணிந்ததன் பின் சிறுதொடக்கு ஏற்பட்டு) ஆரம்பத்தில் மஸ்ஹு செய்த நேரத்தில் இருந்து அதன் நேரம் கணிக்கப்படும்.
4-வுழூவின் போது கழுவப்படக்கூடிய பர்ழான இடங்களை மறைத்தல்.
5-இரண்டு கால் உறைகளும் (ஹலால்) ஆகுமானதாக இருத்தல்.

## மஸ்ஹு செய்யும் முறை

1-இரு கைகளையும் தண்ணீரில் நனைத்தல்.
2-காலின் மேற்பகுதியைக் கை விரல்களால் தடவுதல்
3-வலது காலை வலது கையாலும், இடது காலை இடது கையாலும் மஸ்ஹு செய்தல்.

## மஸ்ஹை தடுக்கக் கூடியவைகள்

1-கால் உறைகளை நீக்குதல்
2-குளிப்பை கடமையாக்கக் கூடியவைகள் ஏற்படுதல்
3-மஸ்ஹுடைய நேரம் முடிவடைதல்

# குளிப்பு

## குளிப்பின் ஆதாரம் :

﴿ وَإِن كُنتُمۡ جُنُبٗا فَٱطَّهَّرُواْ ﴾المائدة: ٦

நீங்கள் குளிக்கக் கடமைப்பட்டோராக இருந்தால் குளித்துப் பரிசுத்தமாகிக் கொள்ளுங்கள். (அல் மாஇதா:6)

## குளிப்புக் கடமையாகும் அம்சங்கள்.

1-இந்திரியம் வெளியாகுதல்.(கனவின் மூலம் அல்லது மனைவியை முத்தமிடுதல் மூலம்.)
2-மனைவியுடன் உடலுறவு கொள்ளல். (இந்திரியம் வெளிப்படாவிட்டாலும் சரியே)
3-மாதவிடாய் இரத்தம் நின்றுவிடல்
4-பிரசவ இரத்தம் நின்று விடல்
5-கா.:.பிர் இஸ்லாத்தை ஏற்றால்
6-முஸ்லிம் மரணித்தால்

## குளிப்பின் (வாஜிபான) செயல்கள்.

1-நிய்யத் (சுத்தமாவதை மனதில் நினைத்தால் போதுமானது, வாயினால் மொழியக் கூடாது)
2-உடம்பை பூரணமாக கழுவுதல்
3-முடிகளை குடைந்து கழுவுதல்

## குளிப்பின் சுன்னத்துகள்

1-பிஸ்மில்லாஹ் சொல்லுதல்
2-மணிக்கட்டு வரை இரு கைகளையும் மூன்று முறை கழுவுதல்
3-இடது கையால் தன் அபத்தை கழுவி அசுத்தங்களை நீக்குதல்
4-உழூ செய்தல்
5-முடியை மூன்று முறை கழுவுதல்
6-வலது புறமாக ஆரம்பித்து இடது புறம் வரை உடம்பை பூரணமாக கழுவுதல்

## சுத்தம் கடமையாகும் சில செயல்கள்

**சிறு தொடக்கிலிருந்து சுத்தமாகுதல் (வுழூச் செய்யக் கடமையான சந்தர்ப்பங்கள்)**

1-தொழுகை
2-க.:.பாவை தவாப் செய்தல்
3-குர்ஆனை தொடுதல். இவைகளுக்கெல்லாம் சிறு தொடக்கிலிருந்து சுத்தமாக இருத்தல் (வுழூ) கடமையாகும். (இந்த மூன்றாவதில் கருத்து வேற்றுமையிருப்பது குறிப்பிடத்தக்கது).

**இரண்டாவது பெருந்தொடக்கிலிருந்து சுத்தமாக இருத்தல்.**

1-சிறு தொடக்கு மூலம் ஹராமான அனைத்தும் இதில் ஹராமாகும்.
2-குர்ஆனை ஓதல்.
3-பள்ளிவாசலில் அமர்தல்.

# தொழுகை

தொழுகையின் ஆதாரங்கள், முக்கியத்துவம், சிறப்பு பற்றி ஏற்கனவே கூறியுள்ளோம்.

## தொழுகையின் நிபந்தனைகள்

1-முஸ்லிமாக இருத்தல்
2-புத்தி உள்ளவனாக இருத்தல்
3-பருவமடைந்திருத்தல்.
4-தொழுகையின் நேரத்தை அடைதல்.

| பர்ளு | ரக்அத்துகளின் எண்ணிக்கை | தொழுகையின் நேரம் |
|---|---|---|
| பஜ்ர் | 2 ரக்ஆத் | பஜ்ர் நேரம் ஆரம்பமானதில் இருந்து சூரியன் உதிக்கு முன் |
| லுஹர் | 4 ரக்ஆத் | சூரியன் நடுவானத்தை அடைந்தது முதல் அஸர் நேரம் வரை (ஒரு பொருளின் நிழல் அதனைப் போன்ற நீளத்தைக் கொண்டிருத்தல்) |
| அஸ்ர் | 4 ரக்ஆத் | அஸ்ர் நேரம் தொடக்கம் சூரியன் மறையும் வரை |
| ம.்.ரிப் | 3 ரக்ஆத் | சூரியன் மறைந்ததில் இருந்து செவ்வானம் மறையும் வரை |
| இஷா | 4 ரக்ஆத் | ம.்.ரிப் நேரம் முடிந்தது முதல் (செவ்வானம் மறைந்ததிலிருந்து) தொடக்கம் நடு இரவு வரை |

5-அவ்ரத்தை மறைத்தல் : ஆண்கள் தொப்புள் தொடக்கம் முழங்கால் வரை, பெண்கள் முகத்தையும் கையையும் தவிர உடம்பை பூரணமாக மறைக்க வேண்டும்

6-சுத்தம்
1-சிறு தொடக்கு (அதாவது வுளுவை கடமையாக்கக்கூடியவைகளில் நின்றும் சுத்தமாக இருத்தல்)
2-பெருந்தொடக்கு (அதாவது குளிப்பை கடமையாக்கக் கூடியவைகளில் நின்றும் சுத்தமாக இருத்தல்.
7-அழுக்குகளை நீக்குதல்
1-உடம்பு 2-உடை 3-தொழுகையின் இடம்
மேலே கூறப்பட்ட அனைத்தும் சுத்தமாக இருப்பது கட்டாயமாகும்.
8-கிப்லாவை முன்னோக்குதல்.
9-நிய்யத் (தொழுகையை நிறைவேற்றுவதாக மனதில் எண்ணுதல், வாயினால் மொழிவது கூடாது).

# தொழுகை முறை

قَالَ رَسُوْلُ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ: صَلُّوا كَمَا رَأَيْتُمُوْنِيْ أُصَلِّيْ

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ""என்னை எவ்வாறு தொழக்கண்டீர்களோ அவ்வாறே தொழுங்கள்"" (அறிவிப்பவர் : மாலிக் பின் ஹுவைரிஸ், ஆதாரம் : புஹாரி 361)

(1) வுழூவைப் பரிபூரணமாகச் செய்தல் :

""விசுவாசங்கொண்டோரே! நீங்கள் தொழுகைக்குத் தயாரானால் (அதற்கு முன்னதாக) உங்கள் முகங்களையும், முழங்கைகள் வரையில் உங்கள் இருகைகளையும் கழுவிக்கொள்ளுங்கள், (நீரைத்தொட்டு) உங்கள் தலைகளையும் தடவி (மஸ்ஹுசெய்து)க் கொள்ளுங்கள், கணுக்கால் வரையில் உங்கள் இரு பாதங்களையும் (கழுவிக்கொள்ளுங்கள்)"" (அல் மாஇதா : 6) என்ற அல்லாஹ்வின் திருவசனத்தை அமுல்படுத்தும் முகமாக அவன் ஏவிய பிரகாரம் வுழூச் செய்துகொள்ள வேண்டும்.

நபியவர்கள் கூறினார்கள் : ""வுழூவின்றி தொழுகையும், மோசடிப் பொருளிலிருந்து செய்யப்படும் தருமமும் ஏற்கப்பட மாட்டாது"", மேலும் நபியவர்கள் தொழுகையில் தவறிழைத்தவரைப் பார்த்து ""நீ தொழ நாடினால் வுழூவைப் பரிபூரணமாகச் செய்"" என்று கூறினார்கள்.

(2) தொழக்கூடியவர் எங்கிருந்தாலும் (மக்காவிலுள்ள) க.்.பாவை முழுமையாக முன்னோக்க வேண்டும், அவர் தொழும் தொழுகை கடமையானதா அல்லது உபரியானதா என்பதைக் குறிப்பிட்டு மனதால் எண்ணிக் கொள்ள வேண்டும், ஆனால் நிய்யத்தை மொழியக் கூடாது, ஏனெனில் நபியவர்களோ நபித்தோழர்களோ நிய்யத்தை மொழியவில்லை.

தொழக்கூடியவர் இமாமாக அல்லது தனித்துத் தொழுபவராக இருந்தால் நபியவர்களுடைய ஏவலுக்கேற்ப அவருக்கு முன்னால் ஒரு தடுப்பை வைத்துக் கொள்வார்.

ஒரு சில சந்தர்ப்பங்களைத் தவிர ஏனைய நேரங்களில் கிப்லாவை முன்னோக்குவது தொழுகையின் நிபந்தனையாகும், இதுபற்றிப் பல நூற்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

(3) தான் ஸுஜூத் செய்யும் இடத்தை நோக்கியவராக الله أكبر என்று தக்பீரதுல் இஹ்ராம் (முதலாம் தக்பீர்) சொல்வார்.

(4) தக்பீர்ச் சொல்லும் போது தனது இரு கைகளையும் தனது தோள்புயம் அல்லது காதின் கீழ்ப் பகுதி வரை உயர்த்துவார்.

(5) தனது வலது கையை இடது கையின் மணிக்கட்டு, முன்னங்கை, குடங்கை ஆகிய மூன்று இடங்களிலும் படுமாறு வைப்பார். வாஇல் பின் ஹுஜ்ர் (ரழி) அவர்களுடைய ஹதீஸும், குபைஸா பின் ஹலப் (ரழி) அவர்கள் தனது தந்தை வாயிலாக (நபியவர்களைத் தொட்டும்) அறிவித்த ஹதீஸும் இதற்கு சான்றாக அமைகின்றன.

(6) பின்னர் தொழுகையின் ஆரம்ப துஆவை ஓதுவார் :

اَللّٰهُمَّ بَاعِدْ بَيْنِيْ وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَّ بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ، اَللّٰهُمَّ نَقِّنِيْ مِنْ خَطَايَايَ كَمَا يُنَقَّى الثَّوْبُ الْأَبْيَضُ مِنَ الدَّنَسِ ، اَللّٰهُمَّ اغْسِلْنِيْ مِنْ خَطَايَايَ بِالثَّلْجِ وَالْمَاءِ وَالْبَرَدِ

(அல்லாஹும்ம பாஇத் பைனீ வபைன கதாயாய கமா பாஅத்த பைனல் மஷ்ரிகி வல்ம.்.ரிபி. அல்லாஹும்ம நக்கினீ மின் கதாயாய கமா யுனக்கஸ் ஸௌபுல் அப்யழு மினத்தனஸ். அல்லாஹும்ம.்.ஸில்னீ மின் கதாயாய பிஸ்ஸல்ஜி வல்மாஇ வல்பரத்.)

பொருள் : இறைவா! கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையே வெகு தூரத்தை நீ ஏற்படுத்தியதைப் போன்று எனக்கும் எனது தவறுகளுக்குமிடையே தூரத்தை ஏற்படுத்துவாயாக, இறைவா! வெண்மையான ஆடை அழுக்கிலிருந்து தூய்மைப்படுத்தப்படுவது போன்று என்னை என் தவறுகளிலிருந்து தூய்மைப் படுத்துவாயாக, இறைவா! தண்ணீராலும் பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என் தவறுகளைக் கழுவி விடுவாயாக. (புஹாரி 744 முஸ்லிம் 598)

அவர் விரும்பினால் அதற்குப் பதிலாக, நபியவர்களின் மூலம் அறிவிக்கப்பட்டுள்ள பின்வரும் துஆவையும் ஓதலாம் :

سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ وَتَبَارَكَ اسْمُكَ وَتَعَالَى جَدُّكَ وَلَا إِله غَيْرُكَ

(ஸுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக வதபாரகஸ்முக வதஆலா ஜத்துக வலாஇலாஹ கைருக.)

பொருள் : உயர்வடைந்து விட்ட உனது மகத்துவம், இன்னும் பாக்கியமிக்க (பரகத்துடைய) உனது பெயர், மேலும் மகத்தான உனது புகழ் (ஆகியவைகளைக்) கொண்டு (சகல குறைகளில் இருந்தும்) உன்னை நான் பரிசுத்தமாக்குகிறேன் (துதிக்கிறேன்) மேலும் நீயின்றி (வணக்கத்திற்குரியவன் வேறு) இறைவனில்லை.

மேற்கண்ட இரு துஆக்களையும் தவிர்ந்த, ஆதார அடிப்படையில் வந்துள்ள ஏனைய துஆக்களையும் ஓதலாம், இவ்விரு துஆக்களையும் மாற்றி மாற்றி ஓதுவது சிறந்ததாகும், ஏனெனில் அதுவே நபியைப் பின்பற்றுவதில் மிகப் பரிபூரணமாகும்.

பின்பு

أَعُوْذُ بِاللهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ ، بِسْمِ اللهِ الرَّحْمَنِ الرَّحِيْمِ

(அஊதுபில்லாஹி மினஷ்ஷைதானிர்ரஜீம். பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்) என்று கூறுவார், ""ஸூரத்துல் பாத்திஹா ஓதாதவருக்குத் தொழுகையில்லை"" என நபியவர்கள் கூறியதற்கமைய ஸூரத்துல் பாத்திஹாவை ஓதுவார் (புஹாரி 756, முஸ்லிம் 595)

ஸூரத்துல் பாத்திஹா ஓதியதன் பின்னால் சத்தமிட்டு ஓதும் தொழுகைகளில் (ஸுபஹ், ம.்.ரிப், இஷா) சத்தமாகவும் இரகசியமாக ஓதும் தொழுகைகளில் (ளுஹர், அஸர்) இரகசியமாகவும் ""ஆமீன்"" என்று கூறுவார். அதன்பின் ஏதாவது விரும்பிய ஸூராவை ஓதுவார். அதில் ளுஹர், அஸர், இஷா ஆகிய தொழுகைகளில் ""ஔஸாதுல் முபஸ்ஸல்""[1] எனப்படும் ஸூராக்களிலிருந்து ஓதுவார். ஸுபஹுத் தொழுகையில் ""திவாலுல் முபஸ்ஸல்""[2] எனப்படும் ஸூராக்களிலிருந்தும் ம.்.ரிப் தொழுகையில் ""கிஸாருல்முபஸ்ஸல்""[3] எனப்படும் ஸூராக்களிலிருந்தும் ஓதுவார். சில சந்தர்ப்பங்களில் ம.்.ரிப் தொழுகையில் ""திவாலுல் முபஸ்ஸல்"" அல்லது ""ஔஸாதுல் முபஸ்ஸல்"" எனப்படும் ஸூராக்களிலிருந்தும் ஓதுவார். நபியவர்கள் இவ்வாறு ஓதியதாக அறிவிப்புக்கள் வந்துள்ளன. அஸர் தொழுகையில் ளுஹர் தொழுகையைவிட சற்று குறைவாக ஓதுவார்.

(7) தனது இருகைகளையும் தோள்புயத்தளவிற்கு அல்லது காதளவிற்கு உயர்த்தி தக்பீர் சொல்லியவராக ருகூ.். செய்வார். (ருகூ.்.வில்) தனது விரல்களை பிரித்தவண்ணம் தனது இருகைகளையும் முட்டுக்காலில் வைத்து, தலையும் முதுகும் சமமாக இருக்குமாறு அமைத்துக் கொள்வார். அதில் سُبْحَانَ رَبِّيَ الْعَظِيْمْ (ஸுப்ஹான ரப்பியல் அழீம்) என்று கூறிக்கொள்வார்.

பொருள் : மகத்தான என்னுடைய இறைவனைத் துதிக்கிறேன்.

அதனை மூன்று தடவை அல்லது அதற்கதிகமாகச் சொல்வது சிறந்ததாகும். அதனுடன் சேர்த்து பின்வரும் துஆவையும் ஓதிக்கொள்வது விரும்பத்தக்கதாகும். سُبْحَانَكَ اللّهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ اَللّهُمَّ اغْفِرْلِيْ (ஸுப்ஹானகல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக அல்லஹும்ம.்.பிர்லீ)

பொருள் : இறைவா நீ தூயவன், எங்கள் இறைவா! உன்னைப் புகழ்கிறேன் என்னை மன்னித்துவிடுவாயாக.

(8) இருகைகளையும் தோள்புயம் அல்லது காதளவிற்கு உயர்த்தி நடுநிலைக்கு வருவார். அவர் இமாமாக அல்லது தனித்துத் தொழுபவராக இருந்தால் سَمِعَ اللهُ لِمَنْ حَمِدَهُ (ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதஹு) என்று கூறுவார்.

பொருள் : தன்னைப் புகழ்வதை அல்லாஹ் கேட்டுக் கொண்டான்.

நடுநிலையில் அனைவரும் (இமாம், ம.்.மூம், தனித்துத் தொழுபவர்) பின்வரும் துஆவைக் கூறுவர் :

رَبَّنَا وَلَكَ الْحَمْدُ حَمْداً كَثِيْراً طَيِّباً مُبَارَكاً فِيْهِ مِلْءَ السَّمَاوَاتِ وَالْأَرْضِ ومِلْءَ مَا شِئْتَ مِنْ بَعْدُ

[1]. ஔஸாதுல் முபஸ்ஸல் அத்தியாயங்கள் : ஸூரா அந்நப.். (78) முதல் ஸூரா அழ்ழுஹா (93) வரை.

[2]. திவாலுல் முபஸ்ஸல் அத்தியாயங்கள் : ஸூரா அல்ஹுஜ்ராத் (49) முதல் ஸூரா அல்லைல் (92) வரை.

[3]. கிஸாருல் முபஸ்ஸல் அத்தியாயங்கள் : அழ்ழுஹா (93) முதல் ஸூரா அந்நாஸ் (114) வரை.

(ரப்பனா வலகல்ஹம்து ஹம்தன் கஸீரன் தய்யிபன் முபாரகன் பீஹி மில்அஸ்ஸமாவாதி வல்அர்ழி வமில்அ மாஷி.ஃ.த மின்ப.ஃ.து)
பொருள் : இறவைா! தூய்மையான அருள் நிறைந்த ஏராளமான புகழ் அனைத்தும் உனக்கே உரியது. வானங்கள் பூமிகள் நிரம்ப, இதற்குப் பிறகு நீ விரும்பும் அத்தனை பொருள்களும் நிரம்ப (புகழ் அனைத்தும் உனக்கே).
(9) தனது இரு முழங்கால்களையும் முதலில் வைத்து தக்பீர் சொல்லியவராக ஸஜ்தாச் செய்வார், அவ்வாறு முடியாவிட்டால் முதலில் தனது இரு கைகளையும் பின்னர் தனது இரு முழங்கால்களையும் வைப்பார், தனது இரு கால்களையும் வலைத்து கிப்லாத் திசையை முன்னோக்கும் விதமாகவும், தனது இரு கைவிரல்களைச் சேர்த்து கிப்லாவை முன்னோக்கிய விதமாகவும் வைக்க வேண்டும். ஸுஜூதின் போது ஏழு உறுப்புக்கள் தரையில் பட வேண்டும் : மூக்குடன் சேர்த்து நெற்றி, இரு உள்ளங்கைகள், இரு முழங்கால்கள், இரு பாதங்களின் நுனி விரல்கள். மேலும் மூன்று விடுத்தம் அல்லது அதற்கதிகமாக

سُبْحَانَ رَبِّيَ الْأَعْلَى

(ஸுப்ஹான ரப்பியல் அ.ஃ.லா) என்று கூறுவார்.
பொருள் : உயர்வான என் இறைவன் பரிசுத்தமானவன்.
அதனுடன் சேர்த்து

سُبْحَانَكَ اللّٰهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ اللّٰهُمَّ اغْفِرْ لِيْ

(ஸுப்ஹானகல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக அல்லஹும்ம.ஃ.பிர்லீ)என்று கூறுவதும் விரும்பத்தக்கது.
பொருள் : இறைவா நீ தூயவன், எங்கள் இறைவா! உன்னைப் புகழ்கிறேன் என்னை மன்னித்துவிடுவாயாக.
நபியவர்களின் பின்வரும் கூற்றுகளுக்கமைய (ஸஜ்தாவில்) அதிகமதிகம் பிரார்த்தனை செய்வார்:

1) ""ருகூ.ஃ.வில் இறைவனை (அதிகம்) துதியுங்கள், ஸுஜூதில் அதிகம் பிரார்த்தனை செய்யுங்கள், உங்கள் பிரார்த்தனை ஏற்கப்பட அது மிகவும் தகுதியானதாகும்"" (அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரழி), ஆதாரம் : முஸ்லிம் 479).
2) ""ஓர் அடியான் ஸுஜூதிலேயே தனது இறைவனுக்கு மிக நெருக்கமாக உள்ளான், எனவே அதில் அதிகமாகப் பிரார்த்தியுங்கள்"" (அறிவிப்பவர் : அபூ ஹுரைரா (ரழி), ஆதாரம் : முஸ்லிம் 482)

அதில் தனக்காகவும் பிற சகோதர முஸ்லிம்களுக்காகவும் ஈருலக நலவுகளைக் கேட்பார். அத்தொழுகை கடமையானதாக இருந்தாலும், அல்லது உபரியானதாக இருந்தாலும் சரியே.
தனது தோள்புயங்களை விலாக்களை விட்டும், வயிறை தொடைகளை விட்டும், தொடைகளைக் கால்களை விட்டும் தூரமாக்கி வைப்பார். தனது இரு முன்னங்கைகளையும் தரையில் படாமல் உயர்த்தி வைக்க வேண்டும், நபியவர்கள் கூறினார்கள் : ""ஸஜ்தாவில் நடுநிலையைக் கடைபிடியுங்கள். உங்களில் எவரும் நாய் விரிப்பதைப் போல் கைகளை விரிக்க வேண்டாம்"". (அறிவிப்பவர் : அனஸ் (ரழி), ஆதாரம் : புஹாரி 822, முஸ்லிம் 493)
(10) தக்பீர் சொல்லியவராகத் தனது தலையை உயர்த்தி நடு இருப்பிற்கு வருவார். தனது வலது காலை நட்டு இடது காலை விரித்து அதன் மீது உட்கார்ந்து, இரு கைகளையும் தனது தொடைகளிலும் முட்டுக்கால்களிலும் படுமாறு வைத்துக் கொள்வார். அதில் பின்வரும் துஆவை ஓதுவர் :

رَبِّ اغْفِرْ لِيْ رَبِّ اغْفِرْ لِيْ رَبِّ اغْفِرْ لِيْ اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ وَارْحَمْنِيْ وَاهْدِنِيْ وَارْزُقْنِيْ وَعَافِنِيْ وَاجْبُرْنِيْ

(ரப்பி.ஃ.பிர்லீ ரப்பி.ஃ.பிர்லீ ரப்பி.ஃ.பிர்லீ அல்லாஹும்ம.ஃ.பிர்லீ வர்ஹம்னீ வஹ்தினீ வர்ஸுக்னீ வஆபினீ வஜ்புர்னீ)
பொருள் : இறவைா ! என்னை மன்னித்து விடு, என்னை மன்னித்து விடு, என்னை மன்னித்து விடு, யாஅல்லாஹ் ! என்னை மன்னித்து விடு, எனக்குக் கிருபை செய், எனக்கு

நற்பேறு வழங்கு, எனக்கு சுகம் கொடு, எனக்கு நேர்வழி காட்டிடு, எனக்கு ஆறுதல் அளித்திடு.
ருகூ∴விற்குப் பின் நடுநிலையில் அமைதியாக இருந்ததைப் போன்று, அனைத்து மூட்டுக்களும் அவற்றினுடைய இடங்களுக்கு மீளும் வரை இந்த அமர்விலும் சற்று நேரம் அமைதியாக இருப்பார். ஏனெனில் நபியவர்கள் ருகூ∴விற்குப் பின்னாலும் (நடுநிலை) இரு ஸஜ்தாக்களுக்குமிடையிலும் (நடுயிருப்பு) நீண்ட நேரம் அமைதியாக இருப்பார்கள்.
(11) தக்பீர் சொல்லி இரண்டாவது ஸுஜூது செய்வார், அதில் முதலாவது ஸுஜூதில் செய்ததைப் போன்றே செய்வார்.
(12) தக்பீர் சொல்லி (இரண்டாவது ரக்அத்திற்காக) எழுவார். எழும்போது இரண்டு ஸஜ்தாக்களுக்கிடையில் உட்கார்ந்தது போன்று சற்று நேரம் உட்கார்வார். இது ""ஜல்ஸதுல் இஸ்திராஹா"" (ஓய்விருப்பு) எனப்படும். மிகச்சரியான கருத்தின் பிரகாரம் இவ்விருப்பு ஸுன்னத்தாகும், அதை விட்டால் குற்றமில்லை. அதிலே எந்தவொரு திக்ரோ பிரார்த்தனையோ கிடையாது. பின்பு முடியுமானால் தனது இரு முட்டுக்கால்களையும் தரையிலூன்றி இரண்டாவது ரக்அத்திற்காக எழுவார். அது முடியாவிட்டால் தனது இரு கைகளையும் தரையிலூன்றி எழுவார். முதலாவது ரக்அத்தைப் போலவே ஸூரத்துல் பாத்திஹா ஓதி பின் முடியுமான ஒரு ஸூராவையும் ஓதுவார்.
பின்பற்றித் தொழுபவர் இமாமை ஒருபோதும் முந்திவிடக் கூடாது. ஏனெனில் நபியவர்கள் தனது சமூகத்தை அதைவிட்டும் எச்சரித்துள்ளார்கள். இமாமுடன் சேர்ந்து போவதும் (மக்ரூ∴) விரும்பத்தகாததாகும். (ஒவ்வொரு செயற்களிலும்) இமாமுடைய செயல் முடிந்தவுடனும், சத்தம் நின்றவுடனும் தாமதமின்றிச் செய்வதே அவருக்கு (பின்பற்றித் தொழுபவருக்கு) ஸுன்னத்தாகும். நபியவர்கள் கூறினார்கள்: ""இமாம் ஏற்படுத்தப் பட்டிருப்பது பின்பற்றப் படுவதற்கே. எனவே நீங்கள் அவருக்கு மாற்றம் செய்ய வேண்டாம். அவர் தக்பீர் கூறும்போது நீங்களும் தக்பீர் கூறுங்கள். அவர் ருகூ∴ செய்யும்போது நீங்களும் ருகூ∴ செய்யுங்கள். அவர் ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா எனக் கூறும்போது நீங்கள் ரப்பனா வலக்கல் ஹம்து எனக் கூறுங்கள். அவர் ஸஜ்தாச் செய்யும்போது நீங்கள் ஸஜ்தாச் செய்யுங்கள்"" (அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரழி), ஆதாரம் : புஹாரி 734, முஸ்லிம் 411).
(13) பஜ்ர், ஜும்ஆ, பெருநாள் போன்ற இரண்டு ரக்அத்துக்கள் கொண்ட தொழுகையாக இருந்தால் இரண்டாவது ஸஜ்தாவிற்குப் பின்னால் வலது காலை நாட்டி, இடது காலை விரித்து, வலது கையை வலது தொடையின் மீது ஆட்காட்டி விரலைத் தவிர ஏனைய விரல்களை மடக்கி வைத்து உட்கார்வார். அல்லாஹ்வை நினைவு கூறும்போதும், பிரார்த்தனையின் போதும் அவ்விரலால் (ஆட்காட்டி விரலால்) ஏகத்துவத்தின்பால் சுட்டிக்காட்டுவார். அவருடைய கை சின்னிவிரல் மோதிரவிரல் ஆகியவற்றை மடித்து, பெருவிரலை நடுவிரலுடன் வளையல் அமைப்பில் சேர்த்து, ஆட்காட்டி விரலால் சுட்டிக்காட்டினால் அதுவும் சிறந்ததாகும். ஏனெனில் இரு முறைகளும் நபியவர்களைத் தொட்டும் அறிவிக்கப்பட்டுள்ளன. இரு முறைகளையும் மாற்றி மாற்றிச் செய்வதே சிறந்ததாகும். அவரது இடது கையை இடது தொடை, முட்டுக்காலின் மீது வைத்துக்கொள்வார். பின்பு இவ்விருப்பில் அத்தஹிய்யாத் ஓதுவார், அது :

التَّحِيَّاتُ لِلَّهِ وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ ، السَّلاَمُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللَّهِ وَبَرَكَاتُهُ ، السَّلاَمُ عَلَيْنَا وَعَلَى عِبَادِ اللَّهِ الصَّالِحِينَ ، أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ ، وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ.

(அத்தஹிய்யாது லில்லாஹி வஸ்ஸலவாது வத்தய்யிபாது அஸ்ஸலாமு அலைக அய்யுஹந்நபிய்யு வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன். அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லல்லாஹ் வஅஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹு)
பொருள் : காணிக்கைகளும் வணக்கங்களும் பாராட்டுக்களும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே உங்களின் மீது ஸலாமும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் பரகத்தும் ஏற்படட்டுமாக! எங்களின் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் அனைவர் மீதும் ஸலாம் உண்டாகட்டும், வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை என்று உறுதியாக நம்புகிறேன். மேலும், முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதருமாக இருக்கிறார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்.
பின்பு பின்வரும் ஸலவாத்தைக் கூறுவார் :

اَللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ ، وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ ، إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ ، اللَّهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ ، وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلَى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ ، إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ

(அல்லாஹு ம்ம ஸல்லி அலா முஹம்மதின் வஅலாஆலி முஹம்மதின் கமா ஸல்லைத அலா இப்ராஹீம வஅலாஆலி இப்ராஹீம இன்னக ஹமீதுன் மஜீத். அல்லாஹு ம்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலாஆலி முஹம்மதின் கமா பாரக்த அலா இப்ராஹீம வஅலாஆலி இப்ராஹீம இன்னக ஹமீதுன் மஜீத்)

பொருள் : இறைவா! இப்ராஹீம் அவர்களின் மீதும் இப்ராஹீம் அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ கருணை புரிந்ததைப் போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார் மீதும் கருணை புரிந்திடு. நீயே புகழுக்குரியவனும், கண்ணியமிக்கவனும் ஆவாய். இறைவா! இப்ராஹீம் அவர்களின் மீதும் இப்ராஹீம் அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ உன் அருள் வளத்தைப் பொழிந்தைப் போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார் மீதும் உன் அருள் வளத்தைப் பொழிந்திடு, நீயே புகழுக்குரியவனும், கண்ணியமிக்கவனும் ஆவாய்.

மேலும் நான்கு விடயங்களை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுவார்:

اَللَّهُمَّ إِنِّيْ أَعُوذُ بِكَ مِنْ عَذَابِ جَهَنَّمَ ، وَمِنْ عَذَابِ الْقَبْرِ ، وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ ، وَمِنْ فِتْنَةِ الْمَسِيحِ الدَّجَّالِ

(அல்லாஹு ம்ம இன்னீ அஊதுபிக மின் அதாபி ஜஹன்னம வமின் அதாபில் கப்ரி வமின் பித்னதில் மஹ்யா வல்மமாதி வமின் பித்னதில் மஸீஹித் தஜ்ஜால்)

பொருள் : எங்கள் இரட்சகனே! நரக வேதனையிலிருந்தும், கப்ருடைய வேதனையிலிருந்தும், வாழ்வு, மரணம் ஆகியவற்றின் சோதனையிலிருந்தும், தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்தும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

பின்பு ஈருலக நலவுகளிலிருந்து அவர் விரும்பியதைக் கேட்பார், அவருடைய பெற்றோர் மற்றும் ஏனைய முஸ்லிம்களுக்காக பிரார்த்தனை செய்தாலும் பிரச்சினையில்லை. அது கடமையான தொழுகையானாலும் அல்லது உபரியான தொழுகையானாலும் சரி. ஏனெனில் நபியவர்கள் இப்னு மஸ்ஊத் (ரழி) அவர்களுக்கு தஷஹ்ஹு தை (அத்தஹிய்யாத்தை)க் கற்றுக் கொடுத்த பின் ""பின்னர் உங்களுக்கு விருப்பமான துஆவைத் தேர்ந்தெடுத்து அதன் மூலம் துஆச் செய்யுங்கள்"" என்று கூறினார்கள். மற்றோர் அறிவிப்பில் : ""பின்னர் விருப்பமான தேவையைத் தெரிவு செய்து கேட்கட்டும்"" என்று கூறினார்கள். இது ஓர் அடியானுக்கு ஈருலகிலும் பலனளிக்கும் அனைத்தையும் உள்ளடக்குகின்றது. பின்னர் السلام عليكم ورحمة الله (அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லஹ்) என்று வலது, இடது பக்கங்களுக்குத் திரும்பி ஸலாம் சொல்வார்.

(14) ம.ீரிப் போன்ற மூன்று ரக்அத் தொழுகையாகவோ அல்லது ளுஹர், அஸர், இஷா போன்ற நான்கு ரக்அத்துக்களைக் கொண்ட தொழுகையாகவோ இருந்தால் ஏற்கனவே கூறப்பட்ட அத்தஹிய்யாத்தை ஸலவாத்துடன் சேர்த்து ஓதுவார். பின்பு தனது முட்டுக்கால்களால் ஊன்றி, இருகைகளையும் தனது தோள்புயத்தளவிற்கு உயர்த்தி الله أكبر என்று கூறியவராக (மூன்றாவது ரக்அத்திற்காக) எழும்புவார். ஏற்கனவே கூறப்பட்டது போன்று இருகைகளையும் நெஞ்சின் மீது வைத்து பாத்திஹா மாத்திரம் ஓதுவார்.

ளுஹர்த்தொழுகையில் மூன்றாம் நான்காம் ரக்அத்துக்களில் சில சந்தர்ப்பங்களில் பாத்திஹாவை விட மேலதிகமாக ஓதினால் பரவாயில்லை. ஏனெனில் நபியவர்களைத் தொட்டும் இதுபற்றி அபூ ஸஈத் (ரழி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸில் இடம்பெற்றுள்ளது. முதலிருப்பில் அத்தஹிய்யாத்துக்குப் பின் நபியவர்கள் மீது ஸலவாத்துச் சொல்வதை விட்டால் தவறில்லை, ஏனெனில் முதலிருப்பில் அது கடமையில்லை, மாறாக ஸுன்னாவாகும். பின்னர் ம.ீரிப் தொழுகையில் மூன்றாம் ரக்அத்திலும் ளுஹர், அஸர், இஷாத் தொழுகைகளில் நான்காவது ரக்அத்திலும் அத்தஹிய்யாத் ஓதுவார், மேலும் நபியவர்கள் மீது ஸலவாத்துச் சொல்வார், அல்லாஹ்விடம் நரக வேதனை, கப்ருடைய வேதனை, வாழ்வு இறப்பு ஆகியவற்றின் சோதனை, தஜ்ஜாலுடைய சோதனை ஆகியவற்றை விட்டும் பாதுகாப்புத் தேடுவார். பின்பு ஏற்கனவே இரண்டு ரக்அத் தொழுகையில் சொல்லப்பட்டதைப் போல் அதிகமாகப் பிரார்த்தனை செய்வார். இச்சந்தர்ப்பத்திலும் ஏனைய சந்தர்ப்பங்களிலும் நபியவர்கள் ஓதியதாக பின்வரும் துஆ அறிவிக்கப்பட்டுள்ளது :

رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ

(ரப்பனா ஆதினா பித்துன்யா ஹஸனதன் வபில்ஆகிரதி ஹஸனதன் வகினா அதாபன்னார்)
பொருள் : எங்கள் இறைவனே! எங்களுக்கு இந்த உலகிலும் நன்மையை அருள்வாயாக! மறு உலகிலும் நன்மையை அருள்வாயாக! மேலும், நரக நெருப்பின் வேதனையிலிருந்து எங்களை நீ காத்தருள்வாயாக.
என்றாலும் இந்த (இறுதி) அமர்வில் மண்டியிட்டு தரையில் இருப்பிடம் படியுமாறு அமர்ந்து இடதுகாலை வலதுகாலுக்குக் கீழ் வெளிப்படுத்தி, வலதுகாலை நாட்டி வைக்க வேண்டும், இது பற்றி அபூ ஹுமைத் (ரழி) அவர்கள் (நபியவர்களைத் தொட்டும்) அறிவிக்கும் நபிமொழி வந்துள்ளது.
பின்பு السلام عليكم ورحمة الله السلام عليكم ورحمة الله (அஸ்ஸலாமு அலைகும் வரஹ்மதுல்லாஹ்) என்று வலது புறமும் இடது புறமும் திரும்பி ஸலாம் சொல்வார்.

## தொழுகையை முறிக்கும் காரியங்கள்

1-தொழுகையின் நிபந்தனைகளில் ஒன்றை அல்லது கட்டாயமான ஒரு செயலை வேண்டுமென்றே விட்டால்.
2-வுழு முறிதல்.
3-வேண்டுமென்றே சிரித்தல், பேசுதல்.
4-வேண்டுமென்றே உண்ணல், பருகல்.
5-தேவையில்லாத அதிகமான அசைவுகள்.

## தொழுகையில் வெறுக்கத்தக்க செயல்கள்

1-மேலே பார்ப்பது, அல்லது கண்ணை மூடிக் கொள்வது, அல்லது வேறு இடங்களை சுற்றிப் பார்ப்பது.
2-அத்தியாவசியத் தேவையில்லா அசைவுகள்.
3-மலம் ஜலம் இரண்டையும் அடக்கிக் கொண்டு தொழுதல்.
4-ருசியான உணவு தயாராக இருக்கும் நிலையில் தொழுதல்.
5- சிலைகள், உருவப் படங்கள் உள்ள இடங்களில் தொழுதல்.

## தொழுகை முடிந்து ஸலாம் கொடுத்தபின் ஓதும் திக்ருகள்

أَسْتَغْفِرُ الله (அஸ்த.ஃ.பிருல்லாஹ்) என்று மூன்று தடைவ சொல்லி விட்டு பின்வரும் துஆவை ஓதுவார் :

اللَّهُمَّ أَنْتَ السَّلاَمُ ، وَمِنْكَ السَّلاَمُ ، تَبَارَكْتَ يَا ذَا الْجَلاَلِ وَالإِكْرَامِ

(அல்லாஹும்ம அந்தஸ்ஸலாமு வமின்கஸ்ஸலாமு தபாரக்த யாதல்ஜலாலி வல்இக்ராமி)
பொருள் : இறவைா ! நீ சாந்தியளிப்பவன், உன்னிடமிருந்தே சாந்தி ஏற்படுகிறது. மகத்துவமும் கண்ணியமும் உடையவனே நீ பாக்கியமானவன்.

لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ ، لَهُ الْمُلْكُ ، وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ ، لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللَّهِ اللَّهُمَّ لاَ مَانِعَ لِمَا أَعْطَيْتَ ، وَلاَ مُعْطِيَ لِمَا مَنَعْتَ ، وَلاَ يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ

(லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு லஹுல்முல்கு வலஹுல்ஹம்து வஹுவ அலாகுல்லிஷைஇன் கதீர், லாஹௌல வலாகுவ்வத இல்லாபில்லாஹ், அல்லாஹும்ம லாமானிஅ லிமாஅ.ஃ.தைத வலாமு.ஃ.திய லிமாமன.ஃ.த வலாயன்பஉ தல்ஜத்தி மின்கல் ஜத்து)
பொருள் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவனில்லை, அவன் தனித்தவன், அவனுக்கு இணை, துணை எதுவுமில்லை, அரசாட்சி அனைத்தும் அவனுக்கே உரியது, இன்னும் புகழனைத்தும் அவனுக்கே உரியது, மேலும் அவன் அனைத்துப் பொருட்கள் மீதும் சக்தி வாய்ந்தவன், தீமையிலிருந்து விலகுவதும் நன்மையின் மீது ஆற்றல் பெறுவதும் அல்லாஹ்வின் உதவி கொண்டே தவிர இல்லை. எங்கள் இரட்சகனே!

நீ கொடுப்பதைத் தடுப்பவர் எவரும் இல்லை, நீ தடுப்பதைக் கொடுப்பவர் எவரும் இல்லை, மதிப்புடைய எவரும் எந்தப் பலனும் அளிக்க மாட்டார், மதிப்பு உன்னிடமே உள்ளது.

لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَلاَ نَعْبُدُ إِلاَّ إِيَّاهُ ، لَهُ النِّعْمَةُ وَلَهُ الْفَضْلُ ، وَلَهُ الثَّنَاءُ الْحَسَنُ ، لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ ، مُخْلِصِينَ لَهُ الدِّينَ وَلَوْ كَرِهَ الْكَافِرُونَ

(லாஇலாஹ இல்லல்லாஹுு வலாந.ஃபுது இல்லாஇய்யாஹுு லஹுுந்நி.ஃமது வலஹுுல் பழ்லு வலஹுுஸ்ஸனாஉல் ஹஸன். லாஇலாஹ இல்லல்லாஹுுமு.ஃலிஸீன லஹுுத்தீன வலௌகரிஹல் காபிரூன்)
பொருள் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர எவருமில்லை. அவனைத்தவிர வேறெவரையும் நாங்கள் வணங்கமாட்டோம். அருள் அவனுடையது. உபகாரம் அவனுடையது. அழகிய புகழ்களும் அவனுடையன. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர எவருமில்லை. நிராகரிப்போர் வெறுத்தாலும் கலப்பற்ற தூய்மையான வணக்கங்கள் அவனுக்கு மட்டுமே உரியன.

மேலும் 33 سُبْحَانَ الله 33 الحَمْدُ لِله 33 الله أَكْبَر

ஸுப்ஹானல்லாஹ் 33, அல்ஹம்து லில்லாஹ் 33, அல்லாஹுு அக்பர் 33 தடவை சொல்வார் அதனை 100ஆகப் பரிபூரணப்படுத்த

لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ ، لَهُ الْمُلْكُ ، وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ

""லாஇலாஹ இல்லல்லாஹுு வஹ்தஹுு லா ஷரீக லஹுு, லஹுுல் முல்கு வலஹுுல் ஹம்து, வஹுுவ அலா குல்லி ஷய்இன் கதீர்"" என்ற கலிமாவை ஓதுவார். பின்னர் ஆயதுல் குர்ஸி, ஸூரதுல் இ.ஃலாஸ் (குல்ஹுுவல்லாஹுு அஹத்), ஸூரதுல் பலக் (குல் அஊது பிரப்பில் பலக்), ஸூரதுந்நாஸ் (குல் அஊது பிரப்பிந்நாஸ்) ஆகிய ஸூராக்களை ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னாலும் ஓதுவார். ம.ஃரிப், பஜ்ர் தொழுகைகளுக்குப் பின்னால் இம்மூன்று ஸூராக்களையும் மும்மூன்று தடவைகள் ஓதுவது விரும்பத்தக்கதாகும். ஏனெனில் இதுபற்றி ஸஹீஹான நபிமொழிகள் வந்துள்ளன. அதேபோன்று இவ்விரு தொழுகைகளுக்குப் பின்னால்

لاَ إِلَهَ إِلاَّ اللَّهُ وَحْدَهُ لاَ شَرِيكَ لَهُ ، لَهُ الْمُلْكُ ، وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ

""லாஇலாஹ இல்லல்லாஹுு வஹ்தஹுு லா ஷரீக லஹுு, லஹுுல் முல்கு வலஹுுல் ஹம்து, வஹுுவ அலா குல்லி ஷய்இன் கதீர்"" என்ற கலிமாவை 10 தடவைகள் ஓதுவதும் விரும்பத்தக்கதாகும், இது பற்றியும் நபிமொழிகள் வந்துள்ளன.

## இறைவனுக்கே எல்லாப் புகழும்